ஸ்ரீ ஜகத் குரு

# முகவுரை.

எல்லா மதங்களிலும் முதன்மைபெற்று விளங்கும் ஸ்ரீ வேதாந்த சித்தாந்தத்தை அறிதற்கு கனிஷ்ட மத்திம அதிகாரிகளுக்காக அனேக சமஸ்கிருத பிராகிருத நூல்கள் இருக்கின்றன. ஆனால் உள்ளத்தில் விசேஷ சங்கைகளெழும்பாத மந்தமதியுள்ள பரம ஆஸ்திகர்களாகிய சித்த சுத்தியுடைய உத்தம அதிகாரிகளின்பொருட்டுச் சிறிதும் கடின மில்லாதவிரிந்த வேதாந்தப் பிரக்ரியைகளுள்ளதுமான ஓர் நூல் இஃது உபநிசத்துக்களில் உள்ளது. எளிய நடையில் கதா ரூபமாகவே அநேக வேதாந்த நூல்களிலுள்ள கதாசாரத்தை திரட்டி "ஞானபோதினி" என்று பெயர் கொடுத்து மொழி பெயர்க்கப்பட்டது. இந்த நூல் நூதன விவேகிகளுக்கு பிரஹ்ம சாக்ஷாத்காரம் உண்டாவதற்கு மிகவுமுப யோகமுள்ளவை. யாவும் சுருக்கமாய் எழுதப்பட்டது. இந்த நூற் பழகுவோர்க்கு மற்றும் பெரிய வேதாந்த நூல்களை விசாரிப்பதில் மிக்கத்திறமையுண்டாகும். மற்றும் அஞ்ஞானமென்னுமிருளை நீக்கி மெஞ்ஞானப் பொருளைக்கூட்டி வைக்கும். இதில் எழுத்துப்பிழை சொற்பிழைகளிருக்குமாயின் அவற்றைப் பெரியோர் ஜீவர்கள் சுபாவ மாகத் தோசமுடையவர்களே என்னும் கருத்தை யுட்கொண்டவர் களாய்ச் சேர்த்துப் படித்துக்கொள்வார்களென்று நம்புகிறேன்.

இந்நூல் கிடைக்குமிடம்:—

**L. V. பெருமாள்சாமி செட்டியார்,**

வேதாந்த மடம் தர்மகர்த்தா,

கோமாரபாளையம் — பவானி.



## விநாயகர் துதி.

மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான் கருப்பூர விளக்குப்
[போலென்
பொய்யுடைய வருள்போதப் பொருளுடையா னருளுடையான்
[பொறியைந்தாலும்
மையுடைய மனத்தாலும் யக்குடையார் மதங்களைத்தா மதங்களாக்குங்
கையுடைய முகமுடையா னகமுடையான்றனைக் கருத்திலிருத்தல்
செய்வாம்.

## விஷ்ணு துதி.

சீர்கொண்டத் தென்னிலங்கைச் செல்வச் சிறப்புடைய
கார்கொண்டக் காப்புடையோன் வேந்தன் சிரமறுத்து.
சீர்கொண்ட சீதாச்சிறை மீட்டித் தேவராட
கார்கொண்ட மேனியனே கா.

## மும்மூர்த்தி வணக்கம்.

கார்குழலாள் வேல்விழியில் காதலுற்று யேங்கிடாது
பார்வதியும் கங்கையினைப் பார்புகழ லார்ச்சடையில்
ஏறாந்தேன் பொன்னடியும் யாதவத்தோன்றுளினையும்
மராமல் மாலுந்தியோனே கோர்.

## நேரிசை வெண்பா.

துவராடை யுள்ளோருந் தூயுரையாருய்வான்
சிவயோக சாரமெனச் செப்ப நவையில் புகழ்
கொண்ட பரவைந்து கரக்கோ நின்னடிகட்குத்
தண்டனிட்டே னறிளைத்தர.

உ

# யஜுர் வேதம்

# ஞான போதினி

## பிரகதாரண்ய உபநிடதம்

## யாஞ்யவல்யர் சரித்திரம்.

ஸ்ரீ வியாச பகவானுடைய மாணாக்கன் வைசம்பாயனர் யாஞ்யவல்யருக்கும் மற்றும் சில மாணாக்கருக்கும் வேத பாடங்களைக் கற்றுக்கொடுத்தார். நான்கு வேதம் ஆறு சாஸ்திரம் உபநிடதமுதலானதும் கற்று ஆசாரியரிடம் மாணாக்கர் மனோவாக்கு காயங்களால் பக்தியுடன் சிசுருஷை செய்துவந்தார்கள்.

ஒரு நாள் அவ்விடமிருந்த ரிஷி கூட்டங்களில் ஒரு நிபந்தனையை செய்தார்கள். அதாவது இந்த மகமேரு பர்வத சிகரத்தின் உச்சியில் பிரம்ம சமாஜத்தின்மேல் இன்றையதினம் யாராவது போய் வந்திருந்தால் இன்று முதல் ஏழு தினத்தில் அவனுக்கு பிரம்மஹத்தி தோஷம் உண்டாகக் கடவதென்று முடிவு செய்தார்கள்.

இந்த வார்த்தையைக் கேட்ட வைசம்பாயனருக்கு மனம் பேதித்து இஞ்சித்து பிரமஹத்தி தோஷம் உண்டாயிற்று, இதனால் துயரையடைந்து வைசம்பாயனர் மாணாக்கர்களைப் பார்த்து சொல்லுகிறார். இந்த தோஷத்திற்கு பிராயசித்தம் செய்யவேண்டியிருப்பதால் அதற்குண்டான பிரயத்தினம் செய்யுங்களென்றான்.

மாணாக்கரில் யாஞ்யவல்யர் சொல்லுகிறார். தன்னோடு வசிக்கும் சகபாடிகள்மேல் கருணை வைத்து பக்தியுடன் ஆசாரியரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

சற்குருவே தங்கள் சரீரம் விருத்த திசையிலிருப்பதால் பிராய சித்தம் உங்களால் செய்துக்கொள்ள முடியாது. இந்த மாணக்கர் கூட்டத்தில் அனைவரும் பால்யர்களாக விருக்கிறார்கள் ஆனதினால் நான்தான் தகுந்த வாலிபமுடையவன் சரீரதிடமுள்ளவன் ஆனதால் உங்கள் பிரமஹத்தி தோஷத்தை நிவர்த்திக்க நானே யுகந்தவன் உத் திரவு கொடுங்களென்றான்.

இதைக்கேட்ட வைசம்பாயனர் யாஞ்யவல்யன்பேரில் சினங் கொண்டு அடே யாஞ்யவல்யா என்னை மகிழ்விக்கும் பாவனையைச் செய்கின்றனையா நீ எல்லோரிலும்விட உயர்ந்தவனு உனக்கு இவ்வ ளவு கர்வம் வந்துவிட்டதா நீ அதிகப்பிரசங்கி நீ என்னுடைய மாணக் கனுயிருப்பதற்கு யோக்யனல்ல ஆனதினால் யென்னுடைய இடத்தில் கற்றுக்கொண்ட வித்தைகளையெல்லாம் பரித்யாகம் செய்துவிடு என் றான்.

யாஞ்யவல்யர் சொல்லுகிறார் நான் குற்றமாக ஒன்றும் சொல்ல வில்லையே என்றான். இனி மறுத்துப்பேசினால் உன் தேகமழிய சாப மிடுவேனென்றான்.

யாஞ்யவல்யர் யோசித்தார் நமது ஆச்சாரியாருக்கு பிரமஹத்தி தோஷத்தினால் இந்தப்படி பேசுகிறார் நான் உயிருடனிருந்தால் இன் னும் வேறு யாரிடமாவது வித்தை கற்றுக்கொள்ளலாமென்று நினைத்து தன் சித்து வலியால் இதோ நான் கற்ற வித்தையை பரித்யா கம் செய்தேனென்று வாந்தி பண்ணிவிட்டார்.

வாந்தியாக செய்த வித்தைகள் மணிகளாக விழுந்தது அதை மற்ற சிஷ்யர்கள் பக்ஷி ரூபமெடுத்து புசித்துவிட்டார்கள்.

யாஞ்யவல்யர் இனி செய்யவேண்டியதை யோசித்தார் குருவை நமஸ்கரித்து புறப்பட்டு வந்து இனி மானிடர்களிடத்தில் வித்தை கற் றுக்கொள்வதில்லையென்று உறுதிகொண்டு சூரியனிடம் வித்தை கற் றுக்கொள்ள சூரியனைக்கோரி தவஞ்செய்கிறார்.

சில நாட்களில் சூரிய பகவான் ஒரு மானிடனாக வந்து யாஞ்ய வல்யாவென்று அழைத்தார் கண் விழித்துப் பார்த்தார் நான் சூரியன் என்னை எதற்காகக்கோரி தவஞ்செய்தாய் காரணம் சொல்லுமென்று கேட்டார்.

அதற்கு யாஞ்ய வல்யர் சொல்கிறார். சூரியபகவானே என்னை மாணாக்கனுக்கி வித்பாப்பியாசம் செய்துக்கொடுத்து ஆத்மஞானத்தையும் அருள் செய்யவேண்டுமென்றார். சூரியன் அந்தப்படியே ஆகட்டுமென்று சொல்லி தன்னுடன் அழைத்துக்கொண்டுபோய் தன் ரதத்திலேற்றி தன்னுடன் கூட இருக்கச்செய்து வியாகரணம், ஆறு சாஸ்திரம், நான்கு வேதங்களும், உபநிஷத்து முதலானதும் தெளிவாக சொல்லிவந்தார். யாஞ்யவல்யர் இதுகளை சுலபமாக கற்றுக்கொண்டார். சூரியன் சொல்லுகிறார் உனக்கு வித்தைகள் பூராவும் வந்துவிட்டது உனதிருப்பிடம் போகலாமென்றார்

சுவாமி நான் கற்றுக்கொண்டதற்கு குருதக்ஷணை கொடுக்க வேண்டுமல்லவா யாது வேண்டும் கேட்டதைத் தருகிறேன் என்றார்.

குரு சொல்லுகிறார் எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை யான் ஒன்று சொல்லுகிறேன் அதை கொடு என்று சொல்லி யாஞ்யவல்யா நீ சந்யாசி யாசிரமமடையாமல் கிரஹஸ்தனயிருந்து நான் உனக்கு உபதேசித்த வேத பாடங்களையும் ஞான வித்தைகளை பக்குவமறிந்து அதிகாரிகளுக்கு உபதேசம் செய்து பின்பு சந்யாசமடையலாமென்றும் இந்தப்படி நீரொத்துக்கொள்வதே எனக்கு குருதக்ஷணையென்று சூரிய பகவான் சொல்ல யாஞ்ய்வல்யர் அந்தப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு சூரியனை நமஸ்கரித்து தன் இருப்பிடம் வந்து தன் தகப்பனிடம் விருத்தாந்த முழுதும் சொன்னார்.

தகப்பன் பிரியத்துடன் நீ இல்லறவாசியாவது எனக்கும் சம்மதமென்றார். யாஞ்யவல்யர் சிலகாலம் தகப்பனுருடன் வீட்டிலேயே இருந்தார்.

## ஜனகன் யாகம்.

இந்தப்படியிருக்க ஜனகராஜன் பட்டணத்தில் ஜனகன் இல்லரத்திலிருந்து ராஜாங்கம் செய்துக்கொண்டும் சாதுக்கள் கூட்டுரவாக ஆத்மஞான சாஸ்திரங்களை விசாரித்துக்கொண்டும் சதாவுமிப்படியே பற்றில்லாவரசாங்கம் செய்துக்கொண்டிருக்கிறார்.

ஒரு நாள் சாதுக்களைப் பார்த்து ஜனகர் சொல்லுகிறார் யாஞ்யவல்யரென்பவர் சூரியனிடம் உபதேசம் பெற்று அவரால் அனேக வேதங்களையும் தெரிந்திருப்பதாக நான் கேள்விப்படுகிறேன் அவரை தருவித்து அவரிடம் பேசவேண்டுமென்பதாக சொன்னார். அதிலிருந்த சாதுவில் ஆஸ்வலாயினர் அதை தடுத்தார்.

இதையறிந்த ஜனகர் ஒரு யோசனை செய்தார். நம்மிடம் இருக்கும் பிராமண ரிஷிகள் பொறாமையுடையவர்கள். இதையொழிக்க அவரை தருவிக்கவேண்டுமென்று ரிஷிகூட்டங்களிடம் நான் ஒரு யாகம் செய்யவேண்டும் அதற்கு பூலோகத்திலுள்ள எல்லா அரசர்களுக்கும், பிராமண விற்பன்னர்களுக்கும் ரிஷீஸ்பரர்களுக்கும் ஓலையனுப்பிதருவிக்கவேணுமென்று சொல்லி மந்திரிகளால் எல்லோருக்கும் தெரியப்படுத்தினார்கள். சில வேவுகாரர்கள் யாஞ்யவல்யர் ஆசிரமம் வந்து தெரிவித்தார்கள். யாஞ்யவல்யரும் தான் வருதாக ஒப்புக்கொண்டார் இதனால் தனக்கு இல்லறம் செய்துக்கொள்ள பொன்னும் கிடைக்குமென்று யோசித்து இவரும் ஜனகன் பட்டணம் போய் சேர்ந்தார்

ஜனகர் இவரை அன்புடன் எதிர்கொண்டழைத்து ஒரு விடுதியில் இருக்கும்படி செய்வித்தார். மற்றும் அரசர்களும் பிராமண கூட்டங்களும் ரிஷி கூட்டங்களும் வந்தார்கள். அவரவர்களுக்கு தகுந்த இடத்தில் இருக்கும்படிச் செய்தார்கள். யாகமண்டபம் தயாராயிற்று காலையில் எல்லோரும் யாக மண்டபம் வந்து சேர்ந்தார்கள். ஆஸ்வலாயினர், புச்சுவென்னும் பிராமணன் காற்கியென்னும் பெண் சிரோன்மணியும் சாகல்யன் யாஞ்யவல்யர் இவர்களும் சபைக்கு வந்து உட்கார்ந்தார்கள் யாகம் நடந்துகொண்டிருக்கிறது.

ஜனகர் இந்த ரிஷிகூட்டங்களைப் பார்த்து ஒரு வார்த்தைச் சொல்லு கிறார். கேளும் சபையிலுள்ள பெரியோர்களே பிராமணர்களே நான் அஸ்வமேத யாகங்களினால் தேவதைகளை பூசிக்க நான் இச்சிக்கின் றேன். மிகுதியான தக்ஷிணையினால் சர்வ பிராமணர்களையும் பூஜிக் கிறேன் தாங்கள் யாவரும் யாகஞ்செய்ய உத்திரவு தரவேண்டும் என்று கைகூப்பி கும்பிட்டு நின்றான். இந்தப்படிச் சொன்ன ஜனக ரைப் பார்த்து மறையவர்கள் எல்லோரும் ஆஞ்ஞை தந்தார்கள். யாகத்தைப் பூர்த்தி செய்துவிட்டார்கள்.

ஜனகர் பிராம்மணர்களுக்கு பசுதானம் செய்ய யோசித்து அத னால் யாஞ்யவல்யருடைய வித்தை பிரபவத்தையரிய ஒரு யுக்தி செய் தார். ஆயிரம் பசுவை தயார் செய்து பசுக்கள் கொம்பிற்கு தங்கத் தினால் செய்த பூண்கள் மாட்டினார். இரண்டாயிரம் பூண்கள் மாட் டினபிறகு தொண்ணூறு துலா தங்கம் தக்ஷிணையாக வைத்து ஓ! பிரா மணர்களே உங்களுள் மேன்மைதங்கிய பிரஹ்மவித்தாய் இருக்கின்ற வர்கள் இந்த ஆயிரம் கோக்களையும் தொண்ணூறு துலா தங்கத்தை யும் கொண்டுபோகலாமென்று உரத்துச் சொன்னார்.

இங்கனம் ஜனகராஜன் வசனத்தைக்கேட்ட மறையவர்கள் தாழ்ந்த முகத்துடன் தலையைக் குனிந்து மௌனமுற்றிருந்தார்கள். இதைப் பார்த்த யாஞ்யவல்யர் தன்னுடைய சிஷ்யர்களைப் பார்த்து சொல்லுகிறார்.

யே சாமவேதம் படிக்கும் சிஷ்யனே இந்த ஆயிரம் பசுக்களை யும் தொன்னூறு தொலா பொன்னையும் கொண்டுபோய் நமது கிரகத் தில் சேர்த்துவாருங்களென்றான்.

அந்த உத்திரவுபடி பொன்னை எடுத்துக்கொண்டு பசுக்கூட்டத் தை யோட்டிக்கொண்டு புறப்பட அவிடமிருந்த பிராமணர்களில் சிலர் மறுத்து யாஞ்யவல்யர்மீது கோபங்கொண்டு சில வார்த்தை கேட் டார்கள். சபையில் கோர சப்தமுண்டாயிற்று.

அதிலொரு பிராமணன் சொல்லுகிறான் யாஞ்யவல்யரே நாங்கள் எல்லோரும் கூடியல்லவோ இந்த யாகத்தை முடித்தோம் இது எல்லா

பிராமணர்களுக்கும் உரித்தானது. கிரமம் அப்படியிருக்க நீர் ஒருத்தர் மாத்திரம் கொண்டுபோவது நியாயமா இந்த பசுவை எல்லாருக்கும் சமபாகமாக்கிக் கொடுங்கள். பூரா பசுவை நீரே கொண்டுபோக விடமாட்டோமென்றூர்கள்.

இதில் ஆசுலாயனரென்பவர் ரம்பவும் படித்தவர் குரோதப்புத்தியுடன் யாஞ்யவல்யர் சமீபம் வந்து சொல்லுகிறூர் அடே குரு சம்பிரதாயம் தெரியாத துராசாரத்தையுடையவனே நீ எல்லா பிராமணரிலும் மேலாவனோ அதிக வித்தை தெரிந்தவனோ நீ கர்வத்தில் அதிகமுள்ளவன். நாங்களெல்லோரும் இரணியகற்பனுக்கு சமதியுடையவர் தர்க்க சாஸ்திரத்தில் பதினொன்கு விதமும் மீமாமஸை நியாய சாஸ்திரம் பதினென்கு, தனுர்வேதம், காந்தர்வ வேதம் அர்த்த சாஸ்திரம் பதினெட்டுவித சாஸ்திரமும் கற்றிருக்கிறேம் எமக்கு சமானம் இவ்விடம் யாரிருக்கிறூர்கள். இவ்வளவு கற்றும் நாம் பண்டிதனல்ல. அந்த பிரஹ்ம வித்தையரிந்தவனல்லன். இப்படியிருக்க நீ பிரஹ்ம வித்தை தெரிந்தவனு நீ யேன் பண்டிதன்போல வெட்கமில்லாமல் எல்லா பிராமணர்களையும் கோபமூரச் செய்தாயென்று கடூரமான மொழியால் ஆசுலாயனன் சொல்ல இதைக்கேட்ட யாஞ்யவல்யர் சொல்லுகிறூர்.

பிராமணர்களே இந்த சபையில் எந்த பிராமணர் பிரஹ்ம வேத்தாவோ அவர்களுக்கெல்லாம் நமஸ்காரம் செய்கிறேன் என்றூர்.

ஆசுலாயனர் சொல்லுகிறூர் இத்த கோக்கள் யெல்லாருக்கும் கிடைக்கவேண்டியதை நீர் ஒருவர் ஏன் அபகரித்துக்கொண்டாய் என்றூன். அதற்கு யாஞ்யவல்யர் சொல்லுகிறூர். ஆசுலாயனரே எனக்கு சுவர்னத்தோடு கூடிய கோக்கள்மீது அபிலாசையுண்டாயிற்று ஜனகர் உத்திரவுபடி அதையபகரித்தேன். உங்கள் கோக்களை நான் கொண்டுபோகவில்லை. ஜனகர் கொடுத்தா யான் கொண்டு எபாகின்றேன் நீங்களும் அவரிடம் கேட்டு வாங்கிக்கொள்ளுங்கள் என்மீது கோபித்து கொள்வது நீயாயமல்லவென்றூன்.

அசுவலாயனர் நான் வேதத்தில் எட்டு கேள்வி கேட்கின்றேன் அதற்கு உத்தரம் சொல்லிவிட்டு கோக்களை கொண்டுபோகலாமென்ருர்.

அதாவது (1) பாவம் புண்யம் செய்தவர்கள் என்னகதி யடைகிருர்கள்?
(2) பிரம்மஞானமடைந்தவர் கதியென்ன?
(3) பூலோகம் உண்டானது எப்படி?
(4) அது அழிவது எப்படி?
(5) பஞ்சேந்திரியங்கள் என்ன செய்கிறது?
(6) மாயையின் காரியம் யாது?
(7) இதை நீக்கியவன் என்ன கதியடைவான்?
(8) மோக்ஷமென்பது யாது?

சரியானபடி இதுகளுக்கு உத்திரம் சொல்லிவிட்டார். மருபடி புச்சுவென்னும் முனிவர் சில கேள்விகள் கேட்டார் அதாவது பூலோகத்தினுடைய அளவு எவ்வளவு என்பதாக அதற்கும் விடையளித்தார். மருபடிக்கோளர் கேள்வி கேட்டார் அதற்கும் விடையளித்தார், பிறகு காற்கி சில கேள்விகள் கேட்டார். அதாவது மூன்றுயேடனைக்கும் அனுமானப் பிரமாணத்தைப் பற்றியும் கேள்க்க இதற்கெல்லாம் விடையளித்தார். மருபடி சில கேள்வி குதர்க்கமாய் கேட்டாள்.

அதற்கு யாஞ்யவல்யர் இனிமேல் குதற்க கேள்விகள் கேட்டால் உன் சிறசு வெடிக்க சாபமுண்டாகும் யென்ருர். காற்கி பயந்து சும்மா அடங்கிவிட்டாள். மருபடி உத்தாலக முனி கேள்விகள் கேட்டார் அதற்கும் சரியான விடையளித்துவிட்டார.

மருபடி சாகல்யர் கோபத்துடன் எழுந்து உரத்து யாஞ்யவல்யா நீ எல்லா பிராமணறையும் மிரட்டுகின்ருய் சூரியனுடைய சிஷ்யனென்று சிரம் கீழே விழுந்துவிடுமென்றும் பயப்படுத்துகிருய். காற்கி கேட்ட கேள்விகளை குதற்கமென்று மிரட்டினுய் நீ எந்த துற்புத்தியினுல் காற்கியின் வசனத்தை அங்கீகரிக்கவில்லை.

காற்கி குமரியாய் யௌவனவஸ்தையில் தாய் தந்தையர்களை விட்டு நிர்வாணமாய் வந்திருக்கிருள். விபசார ஸ்திரீகளைப்போல தனதிஷ்டப்படி திரிகிருள் அவள் காமி புருஷயிச்சையுள்ளவள் இந்த சபையில் யாஞ்யவல்யர் தவிர மற்றவர்கள் நல்லவர்கள். நிருவாண மாயிருப்பவளை யாரும் பார்க்கமாட்டார்கள். இந்த யாஞ்யவல்யன் யௌவனமுள்ளவன் காமி வேதத்தின் பொருளை வேறுவிதமாக உரைப்பவன். இவன் காற்கியின் மற்ம ஸ்தானத்தையும் ஸ்தனத் தையும் அடிக்கடி பார்க்கின்ருன். எப்பொழுது இவன் சபைக்கு வந்தானே அதுமுதல்கொண்டு இவள்மேல் பார்வையும் பணம் பறிக்க ராஜாவின்பேரில் பார்வையுமாகவேயிருககிருன். இதை நான் பார்த் துக்கொண்டேயிருக்கிறேன். இந்த காற்கியும் யாஞ்யவல்யன்பேரி லேயே பார்வையிருக்கிறது. இந்த சபையில் இருக்கும் ரிஷிகள் மூக்கின் நுனியின் திருஷ்டி வைத்துக்கொண்டிருக்கிருர்கள். காற்கி யின்பொருட்டும் பொன்னின்பொருட்டுந்தான் இந்த சபைக்கு வந்தி ருக்கின்ருன். அவள் இவனைப் பார்க்கிருள். இவன் அவளை பார்க் கிருன் அடிக்கடி நமஸ்காரமும் செய்கிருள். யாஞ்யவல்யனுடைய பெருமையை மற்றவர்களிடமும் சொல்லி அவனை மேலாக பாவிக்கி ருள். இவள் வார்த்தையைக் கேட்டு மற்றவர்களும் மயங்குகிருர் கள். இந்தப்படி காற்கியாகிய உத்தமியையும் நிந்தை செய்தான்.

## சாகல்யன் மரணம்.

மருபடி சாகல்யன் காரணமில்லாத கேள்விகளைக் கேட்டான். யாஞ்யவல்யர் சொல்லுகிருர் நீர் கேட்பது குதற்கம் என்ருல் உனக்கு மரணமுண்டாய்விடும். நான் சூரியனிடம் கற்ற வித்தை அவர் எனக்கு ஒரு வரம் தந்தார், என்னவென்ருள் நான் சொன்னதை இரு பத்திரண்டுதரம் அதை மருத்தால் அவர் மஸ்தகம் துண்டித்து கீழே விழும் என்று சொல்லியிருக்கிருர் ஆனதால் நீர் என்ருல் மரணமடை வது வேண்டாமென்று சொல்லுகிறேன்.

சாகல்யன் கால பலத்தினுல் இதை விபரீத பாவனையாக நினைத்து அடே யாஞ்யவல்யா என்னை மிரட்டுகிருய் என் சற்வஞ்யதனமையும்

நிற்பயத்தன்மையும் நீ யறிவாய். சூரியன் ஜடன் அவன் வந்து என்னை தகிப்பானுவென்று மற்றும் துவேசமான வாரத்தைகளை இரு பத்திரண்டு தபா பேசிவிட்டான். உடனே சிரம் துண்டித்து கீழே விழுந்தது சாகல்யருடைய சிஷ்யர்கள் புலம்பினுர்கள்.

சாகல்யரை எல்லா ரிஷிகளும் இகழ்ந்தார்கள். யாஞ்யவல்யரை சாச்சாத் பிரஹ்ம வேத்தாவென்று போற்றினுர்கள். மற்ற பிராமணர் கள் கோக்களை கொண்டுபோக அனுமதி கொடுத்தார்கள். யாஞ்ய வல்யர் சிஷ்யர்களிடம் தங்களாசிரமம் கோக்களை சேர்க்கும்படி சொல்ல அந்தப்படியே செய்தார்கள்.

சாகல்யர் ஜடத்தை தகனஞ்செய்து அந்த எலும்புகளை அவர் சிஷ்யர்கள் மூட்டைக்கட்டிக்கொண்டு அவர் ஆசிரமம் போகும்வழி யில் அந்த அஸ்தி மூட்டையை பணமென்று திருடர்கள் பிடுங்கிக் கொண்டு ஓடிவிட்டார்கள். அஸ்தியும் வீடுபோய் சேரவில்லை.

## ஜனக்கருக்கு உபதேசம்.

ஜனகராஜன் யாஞ்யவல்யரை அவ்விடம் இருக்கச்செய்து இராத் திரி அவருக்கு உண்டி முதலானதும் கொடுத்து தனிமையான அரண் மனையில் படுக்கை முதலானதும் கொடுத்து மறுநாள் காலை கடன் முடித்துக்கொண்டபின் அரசன் தன் சிங்காதானத்திற்கு அழைத்து சென்று சுவாமி எனக்கு ஆத்மஞானமுபதேசிக்கவேணுமென்று கேட்டுக்கொண்டார். யாஞ்யவல்யர் அரசனை பார்த்து ஜனகரே இதற் முன் தாங்கள் யாரிடம் என்ன உபதேசம் பெற்றிருக்கிறீர்களென்று கேட்டார்.

ஜனகர் சுவாமி சில முனிவர்களிடம் அநேகவிதமான உபதேசம் பெற்றிருக்கிறேன். அதை சொல்லுகிறேன் கேளுங்கள்.

சித்துவாவென்னும் பிராமணர் அக்கினி தேவதையை பிரஹ்ம மென்று சொன்னுர். உதங்கரிஷியானவர் சூரியனைப் பிரஹ்மமென்று சொன்னுர். வற்குரிஷி வாயுவை பிரஹ்மமென்று கூறினுர். கற்தவி

விபிதர் நான்கு திசைகளை பிரஹ்மமென கூறினார். சத்யகாமர் சந்திரனை பிரஹ்மமென்று கூறினார். சாகல்யர் பிரஜாபதியைப் பிரஹ்மமென்று கூறினார். இந்தப்படி பூர்வம் ரிஷிகள் உபதேசம் செய்திருக்கிறார்கள் எதை நான் நம்பி அதை தியானிப்பதென்பது தெரியாமல் ஒரு சகுண தெய்வத்தை யுபாசிக்கிறேன் என்றார்.

கேளும் ஜனகரே அக்கினி முதலான தேவதைகள் சகல ஜகத்தை நிர்வகிக்கும் தேவதைகள் அவர்களையும் பிரம்ம ரூபமாய் தியானிப்பது உசிதமாம். ஆனால் ஆத்மஞானம் வரமாட்டாது. நீ முன் ஆறு நாமங்களுடன் கூடிய அக்கினி வாயு சூரியன் திக்கு சந்திரன் பிரஜாபதி இதுகள் கருமத்தை அனுசரித்தது இதனாலடைந்த பலனை கூறுவாய். மருபடி நான் உனக்கு உபதேசிக்கிறேன் என்றார். சுவாமி நான் இதனால் சித்த சுத்தியடைந்தேனென்றார். பிறகு பிரமோபதேசம் செய்து அனுஸ்டானம் செய்துவரச்சொல்லி தன் யெதாஸ்தானம் சென்றார்.

பிறகு ஜனகர் ராஜ்யகாரியத்தில் மூழ்கி பிரஹ்ம தியானத்தை மரந்து மருபடி அக்கினி முதலான தேவதை பூஜைகளையே செய்துவந்தார். யாஞ்யவல்யர் உபதேசத்தை மரந்துவிட்டார். சில நாள் பொறுத்து ஜனகருடைய சங்கதியை பிராமணர்களால் தெரிந்து கற்மத்தை செய்வதாக கேள்விப்பட்டு யாஞ்யவல்யர் தானாகவே ஜனகரிடம் போனார். ஜனகர் யெதிர்கொண்டழைத்து ஆசனத்திருத்தினார். ஜனகரைப்பார்த்து யாஞ்யவல்யர் சில வினாக்களை வினாவினார்.

அதற்குபதில் சொல்லாமல் ஆத்மஞானத்தை மறந்தேனென்றார். மருபடி வேதவிதிப்படி அனேகமாய் தத்துவத்தை எடுத்து சொல்லி ஆத்மஞானத்தையுண்டாக்கினார். மருபடி யாஞ்யவல்யரை தங்கள் பட்டணத்தருகில் சேர்ந்த ஒரு வனத்தில் ஆசிரமம் ஏற்படுத்தி இவ்விடமே இருக்கும்படி செய்து தாய்தந்தைகளையும் இவ்விடமே அழைத்துவந்துவிட்டார். ஜனகரிடம் அடிக்கடி வந்து ஞானவிசாரம் செய்துக்கொண்டிருந்தார்.

## யாஞ்யவல்யர் விவாகம்.
## கார்த்தியாயிணி மைத்ரேயி மனைவியானது.

சில நாளில் யாஞ்யவல்யர் தகப்பனுடைய உத்திரவுப்படி சூரியனுடைய குருதக்ஷிணைக்காக விவாகம் செய்துக்கொள்ள யோசித்து காற்தியாயினியை விவாகம் செய்துக்கொண்டார். மருபடி சிலநாள் பொருத்து மைத்ரேயையும் விவாகம் செய்துக்கொண்டு இரு மனைவியுடன் இல்லறவாசியாய் நடந்துகொண்டு வந்தார்.

இவர்களைக்கொண்டு பிதுர்கடன் தேவர் கடன் அக்கினியோமம் செய்து தேவர்கடனையும் தீர்த்தார். புத்திரர்களையும் புத்திரிகளையும் பெற்றார். தேவர்களுக்கு அவிற்பாகம் கொடுத்து இல்லறத்தை சரிவர நடத்திவந்தார்கள். மைத்திரேயி ஞானயிச்சைக்கொண்டு உன்மத்தரைப்போல ஜனனமரண துக்கத்தைப்பார்த்து நான் ஜடமா ஆத்மாவா சய்தன்யமா நான் வந்ததெப்படி இதற்குமுன் நான் எப்படியிருந்தேன் இப்பொழுது நான் எப்படியிருக்கிறேன். இந்தப்படி விசாரத்திலிருப்பாள்.

யாஞ்யவல்யர் இவளுக்கு ஒன்றும் உபதேசிக்கவில்லை. காற்தியாயினியோ இல்லறத்தை சரியாய் கவனித்து வருவாள் புத்திரர்களை இவளே பெற்றவள் யாஞ்யவல்யர் நெடுநாள் இல்லறத்திலேயே இருந்தார். ஒரு நாள் ஏகாந்தத்திலிருந்து ஆராய்ச்சி செய்தார். இந்த ஜீவ சரீரத்தை கவர்ந்திருப்பது பிராணன், தோல் நரம்பு, சதை இதனால் மூடப்பட்டது. பூர்வம் பிரம்மச்சரி ஆசிரமத்தையடைந்திருந்தேன். சிறிது மாத்திரமுமிச்சை யுண்டாகவில்லை இப்பொழுது மனைவி மைந்தரினால் இச்சையடைந்தேன்.

முன் வனத்தில் தவம் செய்துக்கொண்டிருக்கும்போது தேவஸ்திரீகள் வந்து என்னை மயக்கினார்கள். அதை ஜயித்தேன் கொஞ்சமும் மயங்கவில்லை இப்பொழுது விருத்த அவஸ்தையின்கண் என் மனம் நஷ்டமடைந்துவிட்டது.

மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பிடிக்கக்
காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண்மாதர்
தீ மனச்சேரார் சன்மச் சிறுகுழி மீனுமாந்தர்க்
கேமவாதனைக் கயிற்றுத் தூண்டினுக் கிரையுமொப்பார்.

பாரியையுடையோர் யாவனவனுக்கே பற்றும்போக
நாரியையில்லாதார்க்குப் போகத்தின் நலமெங்குண்டாங்
காரிகை தன்னைநீங்கிற் கருத்துறு ஜகத்து நீங்கும்
பேரியல் சகத்து நீங்கிற் பிரிவில் பேரின்பமுண்டாம்.

ஆனதினால் இந்த ஸ்திரீகளுடைய வலையில் அகப்பட்டு இருக்கிற நாம் தப்பித்துக்கொள்ளவேண்டும். மைந்தர்களுக்கு சீக்கிரம் விவாகம் செய்துவிட்டு துரவறம் போகலாமென்று விவாகம் முடித்தார். மைந்தனுக்கு பிள்ளை பிறக்கட்டுமென்று சில நாள் இருந்தார் குழந்தை பிறந்தது. பிறந்த பேரனுக்கு கல்யாணம் ஆகட்டுமென்று சில நாள் இருந்தார். பேரனுக்கும் விவாகமாய்விட்டது. சரி இனிமேல் இருக்கமுடியாது. இனி இருந்தாலும் மறு பிறவியுண்டாய்விடு மென்று எண்ணி இரண்டு பெண்ஜாதிகளையும் கூப்பிட்டு இரண்டு பேருக்கும் விவகாரம் உண்டாகாதபடி சொல்லுகிறார். மைத்திரே யைப்பார்த்து நான் சந்நியாசி யாசிரமம் செய்துக்கொள்ளப்போகி றேன். நமது வீட்டில் இருக்கும் கோக்களும் பொன்களும் இரண்டாக பிரித்து ஒரு பாதியுனக்கும் மற்றபாதி காற்தியாயினிக்கும் அதைக்கொண்டு வாழுங்கள் என்றார்.

இதைக்கேட்ட மைத்திரேயி அவசரமடைந்து சொல்லுகிறாள். இந்த தனத்தினால் மரணமடையாமல் போவேனோ நான் இதையிச்சிக் கவில்லை. இதனால் நான் ஆத்மஞானமடையலாமா சொல்லுமென் றாள்.

அதற்கு யாஞ்யவல்யர் சொல்லுகிறார் பொன்னினால் மோக்ஷ மடையமாட்டார்கள். இந்த தனத்தினால் கள்ளர்களாலும் துஷ்டர் களாலும் ராஜாக்களாலும் துக்கமே யேர்ப்படும். மேலும் தனவந்த னுக்கு ஞானமுண்டாகாது. இதனடைவு வுசிதமல்ல. மைத்திரேயி

முன்பே அவளுக்கு ஞானவிரக்கியுண்டாய் எப்போதும் அதே விசாரத்தில் இருந்தவள். எப்போதும் காம விக்காரமே அவளிடத்து உண்டானதில்லை. புத்திரர்கள் பெற்றவள் காற்தியாயினியே இவள் புருஷனுக்கு சிஷ்யர்களைப்போல பூஜைப் பணிவிடைச் செய்துக் கொண்டேயிருப்பாள். ஆனதினால் யாஞ்யவல்யர் இவளுக்கு ஞானத்தை உபதேசித்து அதனால் அவளை நல்கதிக்கு யனுப்ப யோசிக்கின்றேன்.

மைத்ரேயியைப் பார்த்துச் சொல்லுகிறார். மைத்ரேயி நீ பொருளில்லாவிட்டால் ஆகாராதிகளுக்குக்கென்ன செய்வாயென்றான்.

அதற்கு மைத்திரேயி சொல்லுகிறாள்: நீங்கள் சந்நியாசி யாசிரமம் செய்துக்கொண்டு பிச்சாடனம் செய்வதுபோல யானும் செய்துக்கொள்வேன். அதைப்பற்றி தாங்கள் கவலைப்படவேண்டியதில்லை ஒரு காலத்தில் அன்னமகப்படாவிட்டாலும் சரீரம் நஷ்டமானாலும் எனக்கு பயமில்லை. இந்த பெண்களுடைய சரீரமோ துற்கந்தமுடையது. நானுவகை துக்கமுடையது. பாவங்களுக்குக் காரணமுடையது. மாயா ரூபமுடையது காமரூப விருக்ஷம். அன்னததினால் விருத்தியடைந்து சிறப்பித்து மயங்குகிறது. பெண்களுக்கே துக்கமதிகமானது ஆண்களுக்கு குறைவு இந்தப்படி ஸ்ரீகள் துக்கத்தைத் தரித்துக்கொண்டிருப்பதைவிட இறப்பதே நல்லது என்றாள். பிரம்மதேவன் இந்த ஸ்ரீகளை வஜ்ஜிரத்தினால் செய்ததாக தோன்றுகிறது. அந்த சரீரம் அழிவதேமேல் ஆனதால் எனக்கு ஞானவுபதேசம செய் என்றாள். ஆனால் இந்த தனங்களையும் கோக்களையும் காற்தியாயினிக்கே கொடுத்துவிடுங்கள் என்றாள்.

மைததிரேயி தனத்தினால் சுவர்க்கமடைய அஸ்வமேதயாகம் செய்து சுவர்க்கபோகமடைகிறார்கள். யெக்கியத்தினாலும் சுவர்க்கமடையலாம். தனத்தினால் தெய்வலோகப் பிராப்த்தி கிடைக்குமேயொழிய மோக்ஷம் கிடைக்காது உன்னைப்போல விவேகிகள் இந்த உலகில் கிடைப்பதரிது. இந்த உலகில் அநேகப் பெண்கள் பொருள் வேணுமென்று புருஷர்களை வதைத்துவிடுகிறார்கள். நீயோ இதை

வேண்டாமென்கிருய் ஆத்மஞானத்தையே வேண்டுகிருய் அதை உப தேசிக்கிறேன் கேளுமென்று சொல்லத்தொடங்கினர்.

## ஞானவுபதேசம்

உலகமானது ஒரே பிரமரூபமாயிருக்கிறது. அது நானுவிதமான ஜகத் ரூபமாய் தோணுகிறது. மனித ஜீவர்களாகவும், பஞ்ச பூதங் களாகவும், கல்லாகவும், மரமாகவும் தோணுகிறது.

மண்ணினுல் செய்த குடம் உடைந்தால் மருபடி மண்ணே யாவதுபோல பல ஜீவராசிகளும் மண் மரம் முதலானதும் பிரளய காலத்தில் நாசமாய் அழிந்துபோனுல் பின் முன் இருந்த ஒரே பிரஹ்ம ரூபமேயாய்விடுகிறது.

நாம் பிரஹ்ம ரூபத்திலிருந்துண்டானவர்கள் அதை மரந்து மனி தரென்றுமாத்திரம் உணர்ந்து மாய்கையில் ரரந்திருப்பதால் நாம் அஞ் ஞானியென்று சொல்லப்படுகிறது. ஞானமென்பது எதுவென்ருல் நாம் பிரஹ்மத்திலிருந்து உதித்தவர் நாம கர்மத்தினுல் ஜீவர்களாக வந் திருக்கிரோம் அதை யனுபவித்துவிட்டோம் இனி நம்ம சொந்தயிட மாகிய பிரஹ்மவஸ்துவைத்தான் அடையவேணுமென்று ஜீவ விவகா ரத்தை சொற்பனம் போல் பாவனை செய்வதுதான் மோக்ஷசாதனம். இந்தப்படி அனுசந்தானம் செய்து மனதை நிக்கிறகம் செய்து மோக்ஷ வீடு அடையக்கடவாய் என்று முடித்து தான் காட்டுக்கு தவஞ் செய்து மோக்ஷமடையபோவதாகச் சொல்லி பெண்ஜாதி புத்திரர் களிடம் விடைபெற்றுக்கொண்டு சந்யாசியாகி வனத்துக்கு சென்று விட்டார். மைத்திரேயும் தனக்கு கொடுப்பதாக சொன்ன தனமுத லானவைகளை காற்தியாயினிக்கே கொடுத்துவிட்டு அவளும் சந்யாசி யாகி மோக்ஷமடைந்தாள்.

யாஞ்யவல்யர் கதை முற்றிற்று.

# பிரதத்தன் கதை.



மகா மகிமைதங்கிய காசி க்ஷேத்திரத்தில் திவோதாசன் என்னும் பெரியவரசன் அவனுக்கு பிரதத்தன் என்னும் புத்திரன் அவன் மிகுந்த பராக்கிரமசாலி உலகில் உள்ள அரசர்களைப் பூராவும் ஜெயித்து மருபடி தேவர்களை ஜயிக்கும் பொருட்டு ஒருவனாகவே வில்லைக்கொண்டு தெய்வலோகம் போய் சுவர்க்கவாயிலண்டை நின்று அவ்விடமிருந்த காவலரிடம் உங்களரசனிடம் சண்டைக்கு வந்திருக்கிறேனென்றும் வராவிட்டால் தோற்றுவிட்டதாக சொல்லவேண்டுமென்றும் சொல்லியனுப்பினான்.

தூதன் அந்தப்படியே போய் காசிராஜன் குமாரன் பிரதத்தன் பூலோக அரசரை வென்று இவ்விடம் உங்களிடம் சண்டைக்கு வந்திருக்கிறான் தாங்கள் சண்டைக்கு வராவிட்டால் தோற்றதாக சொல்லிவிடவேண்டுமாம்.

இதைக்கேட்ட தேவேந்திரன் ஆச்சரியத்தையடைந்து கோபமுடையவனாய் தன் சேனைகளை தயார் செய்தான். விரைவாக தனது புரியைவிட்டு வெளி வந்தான்.

போர் புரியவந்த இந்திரனைப்பார்த்து பிரதத்தன் சொல்லுகிறான் இந்திரனே உன்னிடம் சண்டைக்கு வந்திருக்கிறேன் முதலில் உன் கூர்மை பொருந்திய பாணத்தினால் என்னையடியுங்கள் பிறகு நான் உங்களையடிக்கின்றேன் இது எனது பிரதிக்ஞையென்று சொன்னான்.

இதைக்கேட்ட தேவேந்திரன் தன் சேனைகளை பாணப்பிரயோகம் செய்யச் சொன்னார் மழை பொழிவதுபோல பாணங்களை பொழிந்தார்கள். அதனால் பிரதத்தன் தளர்வுற்று தானும் பாணங்களை பொழிந்து அதைத் தடுத்து மருப்படி அவர்களுக்கு துன்புரும்படி பாணத்தை பொழிந்தார் இதனால் தேவர்களுக்கு ரம்பவும் நஷ்டமாய் விட்டது சிலபேர் மூர்ச்சையடைந்தார்கள்.

தேவேந்திரன் வியப்படைந்து பிரதத்தனைப் புகழ்ந்து சபாஷ் அரசனே உன் யுத்தத்தைக் கண்டு மெச்சினேன் உனக்கு என்ன வரம்வேண்டும் கேட்டதைத் தருகிறேனென்றான். இந்தபடி சொன்ன தேவேந்திரனைப் பார்த்து அரசன் சொல்லுகிறான் நான் செய்த அப சாரத்தைப் பொருத்துக்கொள்ளல்வேண்டுமென்று சொல்லுகிறான்.

அபகாரம் செய்தயெனக்கு உபகாரமாக வரங் கொடுப்பதாக சொன்னீர் உங்களைப்போல புண்யவான்கள் இந்த உலகில் யாரு மில்லை. நான் தங்களிடம் வரம் கேட்கும் விவேகம் எனக்கில்லை நீங் களாகவே மேலாகிய வஸ்துவை கொடுக்கவேணுமென்று சொன்னான்

அதற்கு இந்திரன் நரபதியே நான் உனது இஷ்டத்தைக்கோரி நீர யாது கேட்பீரோ அதைக்கொடுப்பது நியாயம் அதைவிட்டு என்னையே மேலான வரம் கொடு என்றால் அது உசிதமல்லவென்றான் அரசன் சொல்லுகிறான் நீர் சொல்வதும் சரியே நான் வரம் கேட் டேன் நீர கொடுப்பதாகவும் சொல்லிவிட்டீர். நீர் அதைக்கொடுக்கா விட்டால் தோஷமுண்டாகும். ஆனதால் மேலான வரத்தை ஏன் கொ டுக்கக்கூடாதுயென்றான்.

இந்திரன் ஆனால் உன் இஷ்டப்படி நானே உனக்கு உலகத்தில் மேலானதாயிருக்கின்ற ஆத்மஞானத்தை யுபதேசிக்கின்றேன் கேளும்

அரசனே உனக்கு பிரஹ்ம வித்தையையுபதேசிக்கிறேன் இதை வேசி பாவனையாக யிருப்பவனுக்கு சொல்லப்பட்டது. குல ஸ்திரீயை போல் வைத்துக்கொள் நபுஞ்சகனுக்கு ரூபவதியை விவாகம் செயதது போலவாகாமல் முமூச்சுவைப் பார்த்து உபதேசிக்கவேண்டும். ஜன னமரண நிவர்த்தி பிரஹ்மவித்தையே.

அரசனே என்னை சரியாய் அரிந்துக்கொள் இந்த ஜகத்துக்கே சம்பூரண ஆத்மாவாயிருக்கப்பட்டவன் புத்தியாதிகளின் சாக்ஷி ஆகா சமானது சர்வத்தையும் வியாபித்திருப்பதைப் போல சர்வ ஜகத்தி லும் உள்ளும் வெளியும் வியாபித்திருக்கிறேன் இக்காரணத்தினால் நான் துரியன் சிவ சொரூபன் சஜாதிய விசாதீய சுவகதபேத மூன்

றையும் தரிசிக்கும் அக்கினி வடிவன் பிரதத்தா இத்தகைய வடிவத்தை நீ விசேஷமாயறி யெனது சுரூபமே யானிடராகிய உங்களுக்கு பிரயோஜனமாம்.

மனிதலோக சுகமும் பிரஹ்மலோக சுகமும் தெய்வலோக சுகமும் ஒன்றே. சுவர்க்கலோகத்திலுள்ள சுவர்க்கவாசிகளுக்கு பல்வகை அமிர்தாதி ஆகாரங்கள் கிடைக்கின்றன தேவஸ்திரீகளுடைய சுகத்தையடைகிறார்கள். மனுஷலோகத்தில் பலவகை ஆகாரங்கள் கிடைக்கின்றது. பல்வகையுடைய ஸ்திரீகளும் இருக்கின்றார்கள். தெய்வலோகத்தில் ரம்பை யூர்வசி முதலானவர்களுடைய சுகசாதனம் கிடைக்கிறது. மனுச லோகத்தில் திவ்ய ஸ்திரீகளின் சுகசாதனம் கிடைக்கின்றது. மனுசலோகம் அனித்யமானது தெய்வலோகமும் அனித்யமானதுதான். பிரதத்தா மனுஷலோகம் பிரம்மலோகம் பிதிர்லோகம் இவைகளிலெல்லாம் விஷய சுகம் தாரதன்மையாகவுண்டு. பூலோகத்திலிருக்கும் விஷய சுகத்தைவிட இந்திரலோகத்தில் நூறுமடங்கு சுகம் அதிகமுண்டு. இதைவிட இரணிய கற்பலோகத்தில் அதைவிட நூறுமடங்கு சுகமதிகம். பிரஜாபதி லோகத்தில் அதைவிட நூறு மடங்கு சுகமதிகம். பிரம்மலோகத்தில் அதைவிட நூறுமடங்கு அதிகம் ஆனால் விஷய சுகமெல்லாம் ஒன்றே இதனால் ஒன்றும் பிரயோஜனமில்லை.

ஆனதால் வைராக்யமே மேலானது இதனால் ஆன்மஞானமுண்டாகும். பிரதத்தா இந்த ஆன்ம ஞானத்தால் யெந்தபாவதோஷமும் வந்தணுகாது. ஆன்மஞானமடைந்தவன் பிரம்மஹத்தி தோஷமுமுண்டாகாது, இதற்கு ஒரு கதை சொல்லுகிறேன் கேள்:

## விஸ்வரூபன் கதை.

ஒரு காலத்தில் துஸ்டாவென்னும் தேவன் மைந்தன் விஸ்வரூபனென்பவன் தேவர்களுக்கும் புரோகிதனானான்: அந்த விஸ்வரூபன் ஓரிடத்தில் தைத்திரீயரிடம் உற்பன்னமானவன். அவன் மூன்று சிரசுடையவன் ஒன்று சாத்வீகவியல்புடையது. மற்றொன்று ரஜோ குணவியல்புடையது. மற்றொன்று தாமசகுணமுடையது. சாத்வீக

முகத்தினால் அமுதத்தை புசிப்பான். ரஜோகுண முகத்தில் மதுபானம் செய்வான். தாமச முகத்தில் மானிடர்போல அன்னத்தை புசிப்பான்

இந்த விஸ்வரூபன் ஒரு காலத்தில் யாகத்துக்கு யிருத்துவாயிருந் தான் (யாக கர்த்தாவாயிருந்தான்) அவிற்பாகம் பிரித்துக்கொடுத்தான் தேவர்களுக்கு வோங்கிய சப்தத்துடன் யாகபாகத்தைக் கொடுத்தான். தனது மாதாவின் பச்ச பாதிகளான அசுரரின்பொருட்டு தாழ்ந்த சப் தத்துடன் யாகபாகத்தைக் கொடுத்தான். இவ்வண்ணம் தகாதவ னுக்கு அவிற்பாகம் கொடுத்த விஸ்வரூபனை அவன் மூன்று தலைகளை யும் எனது வச்சிராயுதத்தினால் வெட்டியெறிந்தேன்.

என் ஆன்மஞானத்தினால் என்னையொன்றும செய்யவில்லை மறு படி கோடி சந்யாசிகளையும் என் வச்சிராயுதத்தினால் கொன்றிருக்கி றேன். ஆன்மஞான பலத்தால் அது என்னை ஒன்றும் செய்யவில்லை.

இதன் விவரம் சொல்லுகின்றேன் கேளும் பிரதத்தா .முன் ஒரு காலத்தில் ஒருயிடத்தில் கோடி சந்யாசிகள் கூடியிருந்தார்கள். இவர் கள் வருணாசிரம தருமத்தில் பிரியமுள்ளவர்கள். பிரம்மச்சரியம், கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்யாசி இந்த நான்கு ஆஸ்ரமங்களில் உத்தமமாகிய சந்யாசி யாசிரமமுடையவர்கள்.

நான் அந்த சந்யாசி கூட்டங்களைப் பார்த்து ஆசிரமத்துக்குண் டான பிரம்மஞானத்தைக் கேட்டேன். அவர்கள் என்னிடம் சொல் லுகிறார் நாங்கள் வர்ணாசிரம சந்யாசிகள் மூர்த்தியுபாசனைத்தான் செய்வோமென்றார்கள்.

நான் சந்யாசிக்கு பிரஹம ஞானந்தான் உகந்தது மூர்த்தியுபா சனைக் கூடாது என்றேன். அவர்கள் என்பேரில் கோபமுற்று நீ யார் சந்யாசிகளை வினவவந்தவன் என்று சொன்னார்கள்.

உங்களுக்கெல்லாம் ராஜாவாகிய இந்திரனென்றேன். மருபடி இவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து தகாத வார்த்தைகளெல்லாம் பேசி னார்கள்.

கர்மவிதியில் சந்யாசம் விதித்துக்கொண்டிருக்கிறீர்கள் ஆன்மாவின் அறிவு உங்களுக்கில்லை. நீங்களிருந்தென்ன பயன் என்னை ஆன்ம வடிவமென்றுணர சக்தியில்லை. கோபம் கொள்கிறீர்கள். ஆனதால் சண்டாளர் பகைவர் தாழ்ந்தோர் துராசாரமுள்ளவன் இந்நால்வரில் யெவராவது யெதார்த்த வினவைக் கேட்டால் மதிமானனவன் உத்திரம் கூரல் வேண்டுமென்று சாஸ்திரம் கூறுகிறது.

கேட்டுத் தெரிந்துக்கொள்ள விவேகமில்லாதவன் இருந்தென்ன போயென்ன - இந்த சந்நியாசிகள் இருப்பது நிஷ்பலன் வைராக்கியமாவது இருக்கவேண்டும் அதுவுமில்லை இவர்கள் கோபம் அதையும் கெடுத்துவிட்டது ஆனதினல் இவர்களை சிக்ஷை செய்வதே மேல்.

ஆனல் இவர்களை தண்டிப்பது யார் குருவாக வேண்டும் இவர்களுக்கு குருவோ வொருவருமில்லை அரசனல் தண்டிக்கவேண்டும் அரசன் இவ்விடமில்லை நான் தேவலோகத்துக்கரசனனதினல் நானே இவர்களை தண்டிக்கிறேன் யென்று என் வஜ்ஜிராயுதத்தினல் அனைவரையும் வெட்டித்தள்ளினேன் — அந்த தலைகளானது கஜ்ஜுர விருக்ஷங்களாய் முளைத்தது தேவர்களுக்கு அந்த பழங்கள் யாகத்துக்கு உபயோகித்துக்கொண்டார்கள்.

இந்தப்படி விஸ்வரூபனையும் - சந்நியாசிகளையும் யான் கொன்றேன் என்னுடைய ஆத்ம ஞானமகிமையால் - கிஞ்சித்து மாத்திரம் தோஷம் யென்னை யணுகவில்லை ஆனதினல் ஆன்மஞானம் மேலானது யென்று சொல்ல பிரதத்தன் - ஒன்றும் தோன்ருமல் - மவ்னமாயிருந்தான்.

பிரதத்தா அத்துவித ஆன்மாவே நீ ஆன்ம ஞானத்தால் உன்னுடைய யஞ்ஞானம் நீங்கிவிட்டது தூலதேகம் நின்னுடையதன்றும் அதன் காரியமும் நின்னுடையதன்று கற்மங்களின் கற்தாபோக்தா நீயன்றும் யெனது சுரூபமே உனது சுரூபம் இனி யெந்த கற்மங்களும் உன்னை யணுகாது. கற்மங்களுக்கு அதிஷ்டானன் நீ அந்தற்யாமி இந்திரியம் தன் தன் கோளங்களிலிருந்துக்கொண்டு அனுபவிக்கிறது நான் சக்ஷி நான் அசங்கன் நான் நித்யமுத்தன் நான் யெங்கும்

நிறைந்த வஸ்துவென்று யிருப்பாய் இந்தப்படிச்சொன்ன இந்திரனை நமஸ்கரித்து பிரதத்தன் — தன்னுடைய பட்டணம் போய் சேர்ந்தான்.

(பிரதத்தன் கதை முற்றிற்று)

## தத்தியங்கு ரிஷி கதை.



மகா தவத்தையுடைய தந்தியங்கு அதர்வண ரிஷியிடம் தேவேந்திரன் வந்து நமஸ்கரித்து நிற்க தாங்கள் யென்னையொரு பொருட்டாயெண்ணி இவிடம் வந்த காரணமென்னவென்று வினவினர் அதற்கு தேவேந்திரன் சொல்கிறான் இப்பொழுது யெனக்கு ஆத்ம ஞானத்தின் பேரில் விருப்பமுண்டாயிருக்கிறது அதை அனுக்கிரகிக்க வேணுமென்றான் அந்தப்படியே சம்பூரணமாக வுபதேசித்தார்.

உபதேசமானபின் தேவேந்திரன் தந்தியங்கு ரிஷியிடம் சொல்கிறார் - பிராமணரே நமது வர்ணசிரமம் செய்யாநின்ற பிராமணர்களுக்கும் நான் ஒருக்காலும் துரோகம் செய்யமாட்டேன் செய்ததுமில்லை உனக்கும் துரோகம் செய்யமாட்டேன் நான் முன் விஸ்வரூபாதி பிராமணர்களைக் கொன்றிருக்கிறேன் அவர்கள் அவர்களுடைய துஷ்ட சுபாவத்தைக் கண்டுதான் அவர்களைக்கொன்றது. ஆகையால் யெனது ஆக்ஞையைத் தாண்டாதிருப்பீர்.

என்னவென்றால் எனக்கு உபதேசம் செய்த பிரஹ்ம வித்தையை இனி யாருக்கும் உபதேசிக்கக்கூடாது. இதுதான் என் கட்டளை இதை மீறி செய்வீரானால் உங்கள் சிரம் துண்டித்து விழும் இதுதான் நான் சொல்வது யென்றும் மங்களமுண்டாகட்டுமென்று சொல்லி போய்விட்டார். தத்தியங்கு கலக்கமுடையவராகவிருந்தார்.

இந்திரனுக்கு தேவ போகத்தினால் வாசா ஞானமே தவிர ஆத்ம ஞானம் நிலைபெறுவதில்லை இப்படியிருக்க அசுவனி குமாரர்கள்

தத்தியங்கு ரிஷியிடம் வந்தார்கள் - சுவாமி முன் சொல்லியபடி நமக்கு பிரஹ்ம வித்தையை உபதேசிக்க வேணுமென்றார்கள்.

இவர்கள் கேட்டவுடனே தத்தியங்கு ரிஷிக்கு மனதில் வியாகூலமுண்டாயிற்று அசுவனி குமாரர்கள் பொருட்டு உபதேசிப்பேனாகில் இந்திரன் என் சிரசை துண்டித்துவிடுவான்.

இவர்களுக்கு உபதேசிக்காவிட்டால் நான் அவர்களுக்கு சொன்ன வுருதிமொழி பொய்த்துப்போகும் இந்தப்படி யோசித்து என் பிராணன் போனாலும் பரவாயில்லை நான் சொன்ன வார்த்தையை காப்பாற்றுவேனென்று அஸ்வனி குமாரர்களை பார்த்து சொல்லுகிறார்.

உலகத்தில் சில அஞ்ஞானிகள் சிலருக்கு சத்துருவாயும் சிலருக்கு மித்துருவாயுமிருப்பார்கள் நானோ சமதரிசியுடையவன் எனக்கு பேதமே கிடையாது நாய் சரீரியிடத்தும் இந்திரனைப்போலவுள்ள சரீரியினிடத்தும் சமபாவனையாம்.

இப்படியிருக்க இந்திரன் வந்து என்னிடம் பிரஹ்மவித்தை கற்று மறுபடி இதை யாருக்கும் உபதேசிக்கக்கூடாதென்றும் அப்படி தடுத்து உபதேசித்தால் என் சிரம் போய்விடுமென்று சொல்லிப் போனார் உங்களுக்குபதேசிக்க கவலைப்படவேண்டியிருக்கிறதென்றார்

இதைக்கேட்ட அசுவனி குமாரர்கள் சொல்லுகிறார் கேளும் தத்தியங்கரே தேவேந்திரனுக்கு கொடுத்த வரத்தை காப்பாற்ற வேண்டியதுதான் நமக்கு கொடுத்த வாக்குபடி பிரஹ்ம வித்தையை நமக்கு உபதேசிக்கவேண்டியதுதான் அதற்கு நீர் யென்ன சொல்கிறீர்கள்.

கேளும் அஸ்வனி குமாரர்களே இந்திரனுக்கு சொன்னதாவது யாருக்காவது பிரஹ்ம வித்தையை உபதேசித்தால் யென் சிரசு துண்டித்துவிடுமென்றுதான் சொன்னேன் யென் சிரம் போனாலும் பரவாயில்லை. உங்களுக்கு பிரஹ்ம வித்தையை உபதேசிக்கிறேன் இந்த சரீரத்தைபற்றி கவலையில்லை.

நான் அசங்கன் சற்வடிவினன் நானே புருஷன் நானே ஸ்ரீ நானே நபுஞ்சகன் நானே பஞ்சமகாபூதம் நானே பிரபஞ்சம் நானே மனு சந்திரன் சம்பூரணன் ஜோதி ஏழுலகமும் கீழேழுலகமும் நானே சுவேதஜம் அண்டஜம் ஜராயுஜம் உற்பிஜம் நால்வகையோனியும் நானே அதிலுற்பன்ன ஜீவர்களும் நானே சர்வமும் யென்னுன் மாவாகவறிகிறேன் இக்காரணத்தால் மாயை என்னிடத்திலில்லை காமக்குரோதாதிலோபம் யென்னிடத்திலில்லை ஸம்பூரண ஜகத்தை யானே உண்டாக்கினேன் யானே ஜகத்தை ரக்ஷிக்கிறேன் யானே சம்மாரம் செய்கிறேன் இந்தப்படி யெனது சங்கல்ப்பம் இந்த சரீரத்தில் யெனக்கு ஒன்றும் பயனில்லை. யென்று முடித்தார்.

இதைக்கேட்ட அஸ்வனி குமாரர் சொல்லுகிறுர்கள் சுவாமி இதைப்பற்றி பிரமாதமாய் யோசிக்காதீர்கள் நான் வொரு யோசனை சொல்கிறேன் எங்களுக்கு சித்தின் வலியால் உயிர்ப்பிக்கும் சாமார்த்தியமுண்டு இதோ குதிரை நிற்கிறது இதன் தலையை வெட்டி உங்களுக்கு வைத்து குதிரைக்கு உங்கள் தலையை வைத்துவிடுகிறோம். உபதேசம் ஆனதும் இந்திரன் வந்து உங்கள் குதிரை தலையை வெட்டினுல் அதை குதிரைக்கே வைத்து குதிரையிலிருக்கும் உங்கள் தலையை உங்களுக்கே வைத்து வுயிர்செய்துவிடுகிறோமென்றுர்கள் இந்தப்படி சொன்னதைக்கேட்டு சரி அந்தப்படியே செய்வீரென்றுர். அந்தப்படி செய்து அயக்கிரீவனென்று பேருண்டாக்கினுர்கள்.

மருபடி உபதேசம் செய்கிறுர் முதலில் கற்மோபாசனையை போதித்து சித்தசுத்தியுண்டான பிறகு ஆத்ம விசாரம் செய்யவேண்டியதாம் இந்தப்படி உபதேசம் செய்துக்கொண்டிருந்தார்.

இதை தேவேந்திரன் தெரிந்து ஆகாயத்தினிடமாக பார்த்துக்கொண்டிருக்கிறுன் உபதேசம் முடிந்தது இந்திரன் கீழே வந்து சிரத்தை துண்டித்துவிட்டு போய்விட்டான் அந்த குதிரை தலையை குதிரைக்கு வைத்தார் குதிரையிலிருந்த இவர் தலையை இவருக்கே வைத்து உயிற்பித்தார் மறுபடி அஸ்வனி குமாரர் தத்தியங்கு ரிஷியிடம் விடைபெற்றுக்கொண்டு தங்கள் ஆசிரமத்துக்கு போனுர்கள்.

(தத்தியங்கு ரிஷிகதை முற்றிற்று.)

விசாரசாகரம்

# சுபசந்ததி கதை



மாயை யென்னும் ஒரு பட்டணத்தில் சுபசந்ததி யென்னும் அரசன். அவனுக்கு மூன்று குழந்தைகள் அதாவது தத்துவ திருஷ்டி அதிஷ்டி தற்கதிருஷ்டி தகப்பன் சுபசந்ததிராஜா யோசிக்கிறான் நமக்கோ வயதாகிவிட்டது. இராஜீய பாரம் தன்மக்களுக்கு ஒப்பிவித்துவிட்டு தான் காட்டுக்குப்போய் தவஞ் செய்து மோக்ஷமடைய வேண்டுமென்பதாக யெண்ணி தன் மந்திரியை அழைத்து இது சங்கதிகள் சொல்லி தன் மக்களுக்கு தெரியபடுத்தி ராஜியத்தை அவர்களை ஒப்புக்கொள்ளும்படி சொல்லென்றான்.

மந்திரி மக்களுக்கு தெரியப்படுத்தினான் மூவரும் அன்று இராத்திரியாலோசித்தார்கள் இந்த ராஜியபாரம் பெரிதானது இதில் அநேக விவகாரமுண்டு இது மேலானதல்ல. ஆத்ம ஞானமே மேலானது அதனால்தான் நம் தகப்பனும் இதைவிட்டு விலகுகிறார். நாம் இப்பொழுது அதையடையக்கூடாது நாங்கள் மூவரும் வேறு தேசம் போய் ஆத்ம ஞானம் தெரிந்துக்கொண்டு பின்னால் இவிடம் வந்து சேரலாமென்று அன்று இராத்திரியே மூவரும் புறப்பட்டார்கள்.

மூன்று பேர்களும் அநேக ஊர்களை சுற்றிப்பார்த்தார்கள் கடைசியில் ஒரு பட்டணம் அவ்விட கங்கைக்கரையில் ரிஷியாசிரமம் மாணாக்கருக்கு வேத பாடங்கள் அப்யாசம் செய்துக்கொண்டு இருப்பவரிடம் சென்று நமஸ்காரம் செய்தார்கள்.

சுவாமி இவிடமே இருக்கிறோம் யென்று சொல்ல சரியென்று ஆறுமாதம் அவர் சொன்ன பணிவிடை செய்துக்கொண்டிருந்தார்கள் அதன்பின் குருவானவர் இவிடம் யென்னகாரணமாக வந்ததென்றார்.

தத்துவதிருஷ்டி தன் தம்பிமார்களுடைய யெண்ணங்களையறிந்து நாங்கள் மூவரும் சுபசந்ததிகளின் புதல்வர்கள் சொரூப ஞானத்தையடைய விரும்புகிறோமென்றார்கள்.

குருவானவர் சொல்லுகிறார் துக்க நிவர்த்தியே பரமானந்த மோக்ஷமென்று சொல்லுவார்கள். ஞானமானது அநேக சாஸ்திரம் அநேகவிதமாக சொல்லியிருக்கிறது ஜீவ பிரஹ்மபேதத்தை நிவர்த்தி செய்வது மோக்ஷசாதனமென சொல்லப்பட்டிருக்கிறது.

இச்சையானது பிராந்தியினாலுண்டாகிறது நீ யியற்கையிலேயே பிரஹ்ம சொரூபமாயிருக்கிறாய் அதனையடையவிச்சிப்பது சரியன்று எது கிடைக்கவில்லையோ அதையடையவேண்டும் உன்னுடைய சொரூபமோ யெப்போதும் பிராத்தமாகவே யிருக்கிறது. அதை யடைய வேணுமென்கிற யிச்சை பிரார்ந்தியின்றி உண்டாகிறதில்லை

ஜனனமரணாதி சமுசாரம் யெப்போதாகிலும் இருக்குமானால் அதை நிவர்த்தி செய்ய பிரயத்தனம் செய்யவேண்டும் அந்த சமுசாரம் சிறிதும் உன்னிடமில்லை உண்டாகாத துக்கத்தை நிவர்த்திக்க உண் டாகுமிச்சைபிராந்தியே சிஷ்யனே நீ ஜனன மரணமற்ற சேதனனே ஆனதினால் உன்னிருதயத்தில் ஜன்மாதி துக்கத்தை மதிக்கவேண்டாம்.

ரச்சுவில் சற்பம்மித்தை அதுபோல ஆத்துமாவில் சமுசாரம் மித்தை எவனுடைய அந்தக்கரணம் சுத்தமாயிருக்கிறதோ அவனுக்கு மகா வாக்கியத்தினால் திடஞானமுண்டாகிறதோ அப்படி வுண்டான பிறகு சமுசயாதிகளை நிவர்த்தித்துக்கொள்ள சிரவணம் வேண்டிய தில்லையோ அவன் உத்தம அதிகாரி.

மலவிக்ஷேபதோசமுள்ளவன் மத்திமன் கனிஷ்டன் இவர்கள் மகாவாக்யம் கேட்டும் சமுசயம்தீர சிரவணம் செய்யல் வேண்டும்.

வேதமும் குருவும் சொல்லப்பட்ட வாக்கினால் அத்துவைதம் யெப்படி வுண்டாகும் அதற்கு ஒரு கதை சொல்கிறார்.

## பர்சு கதை.

ஒரு அரசனுக்கு பர்சுவென்னும் மந்திரியிருந்தான் அவன் அதிக விவேகமுள்ளவன். ராஜா அவன்பேரில் அதிகப் பிரியமாயிருந்ததினால் மற்ற மந்திரி பிரதானிகளுக்கு இவன்பேரில் பொறாமை யேற்பட்டு

பர்சுவை யெப்படியாவது நீக்கிவிடவேணுமென்பதாக ஒருநாள் இவர்கள் ஒன்றுகூடி ஆலோசித்துக்கொண்டார்கள்.

வெளி கிராமங்களில் கொள்ளை நடக்கச்செய்தார்கள் அந்த ஊர் ஜனங்கள் ராஜாவிடம் முறையிட்டார்கள் ராஜா பெரிய மந்திரியாகிய பர்சுவைப் பார்த்து கொள்ளைக்கூட்டத்தினரை யோட்டிவிடவேணுமென்றான் சரியென்று பிரதானிகளைப்பார்த்து நீங்கள் போய் அந்த கொள்ளை கூட்டத்தினரை விரட்டி வரவேண்டுமென்றான்.

அதற்கு பிரதானி நாங்களே தான் போகவேண்டுமா பெரிய மந்திரியார் ஒருதபா போய்வரலாகாதா வென்றான் அரசன் மந்திரியைப் பார்த்தான் சுவாமி நானே போய்வருகிறேனென்று பர்சு சேனைகளுடன் புறப்பட்டான்.

அவிடம் சென்று கள்ளர் கூட்டத்தை வெரட்டிவிட்டான் அந்த பிரதானிகள் முன்னடி அரசனிடம்போய் மந்திரி பர்சு கள்ளரால் இறந்துவிட்டான் என்று சொல்லிவிட்டார்கள்.

அரசன் சரியென்று வேறு மந்திரியை நியமனம் செய்துகொண்டான் மறுபடி பிரதானிகள் பர்சுவிடம்போய் உனக்கு பதிலாக வேறு மந்திரியை அமர்த்திவிட்டார் நீ அவிடம் போகக்கூடாது போனால் ஆபத்து வருமென்றார்கள்.

பர்சு யோசித்து பொறுமை குணத்தில் பிரதானிகள் செய்தவேலை இருக்கட்டும் தற்சமயம் போகக்கூடாது யென்று வனத்திலேயே யிருந்துவிட்டார்.

இவ்விடம் அரசனிடம் பர்சு இறந்து காட்டில் பிசாசாக திரிவதாக இராஜாவிடம் சொல்லிவிட்டார்கள்.

பர்சு யோசிக்கிறான் இனியென்ன செய்வது தவவேடம்பூண்டு தவஞ்செய்து மோக்ஷமடைவதுதான் மேலானது என்று முடிவுசெய்து ஆத்மவிசாரம் செய்கிறான் நான் இதுவரை ரமணியமான வீட்டில் இருந்தேன் அநேக சுகத்தை அனுபவித்தேன் சுநத்திரமான ஸ்ரீகளு

டன் சுகபோகங்களையனுபவித்தேன் மனித சுகத்துக்கு அரசனுக்குத் தான் அதிக சுகமிருக்கிறது அவனுக்கு வலிமை திடகாத்திரம் யெவ்வனம் ரோகமின்மை இதுகள் உண்டு இந்த அரசனுக்கு மேல் தேவேந்திரனுக்கு அதிக சுகமுண்டு அதற்குமேல் பிதுர் தேவதைகளுக்கு நூறுமடங்கு சுகமதிகம் அதற்குமேல் அஜானுதேவர் காமதேவர் முக்யதேவர் பிரஜாதிபதி பிரகஸ்பதி பிரம்மன் இந்தப்படி மேலே போகப்போக நூறு நூறு மடங்கு சுகபோகமதிகமென்று வேதம் தைத்திரிய உபநிடதம் சொல்கிறது இந்த பரம சுகத்தைக் காட்டிலும் காமத்தை வென்று ப்ரஹ்மத்தையடைபவர்களுக்கு இதைவிட மேலானதாக சொல்லுகிறது சாஸ்திரம் ஆனதால் இதையேயடையவேண்டும் முன் பிரபஞ்சத்தின் ஆசையும் விசயசுக பதவிகளினுடைய ஆசையும் தள்ளினேன்.

பூலோகத்தில் ஸ்ரீகளுடைய ஆசையை நீக்குவது கடினம் இது வாசிட்டத்திலும் சொல்லியிருக்கிறது.

பைந்தொடியா ராசை நோய் கெம்பீர மனிதரையும் பதுமந்தன்னை முந்திரவி கதிர்போலும் மிளிர்விக்கும் கனவிடியும் முனைகூர்வாமும் வெந்த விருப்பு பொறியும் மெனக்கொடிய மனவேட்கை மேருவொத்தோர் சுந்திரஞானியர் தீரர் சூரரையெல்லா மிமைப்பிற்றுருப்பு செய்யும்

இ-பொ:— வழயலணிந்த மாதர்களினுடைய ஆசைவலையில் மேன்மையுள்ள மனிதரையும் அகப்படச்செய்யும் தாமரை புஷ்பமானது சூரியனை கண்டமாத்திரத்தில் புஷ்பம் மலரும் அதைப்போல கூர்மையான அம்பு முனையானாலும் அதிக உஷ்ணமாய் கொல்லனுலையில் காய்த்தால் அதுவும் வுருகுவதுபோல தீரரானாலும் சூரரானாலும் ஞானிகளானாலும் இமைப்பில் மனதை கெடுத்துவிடும்.

ஆகையினால் பெண்களுடைய ஆசைதான் முக்கியமானது இதை வெறுத்து சந்நியாச ஆசிரமம் கொள்வேன் யென்று காயாசம் விபூதி ருத்திராக்ஷமணிந்து மலையடிவாரத்தில் தியானாதிகள் செய்துக்கொண்டு சஞ்சரித்துக்கொண்டிருந்தான்.

பிரதானிகளுடன் அரசன் வேட்டையாட அந்த வனத்திற்கு வந்தான் இந்த பர்சு தவவேடமாயிருப்பதை பார்த்தான் பிரதானி சொல்கிறான் சுவாமி முன்னிருந்த பர்சு மந்திரியானவர் இறந்து காட்டில் பேயாயிருக்கிறான் பார்த்தீரா ஓடிப்போவோம் வாருமென்று வெகு தூரம் ஓடிவந்துவிட்டார்கள்.

இந்தக்கதையைப்போல் வேதங்களினுலும் குருவினுலும் மகாவாக்கியத்தினுலும் ஞானம் வருமென்பதற்கு இந்தக்கதை திருஷ்டாந்தமாக வேதமே சொல்லியிருக்கிறது பஞ்சகோசத்திலும் ஆத்மா வேறு பிரம்மத்துக்கு வேராகத் தோன்றும் திருசியரூபமான பிரபஞ்சமனைத்தும் மித்தை பிரஹ்மஞானம் ஒன்றே நித்தியம்.

(இது ரகசியம்)

யோகமாகியும் அகண்டமாகியும் ஜன்மமில்லாததாகியும் ஆதியந்தமில்லாததாகியும் சச்சிதானந்த ரூபமாயும் யிருப்பது பிரஹ்மம் யெவனுடைய ஹிருதயத்தில் இந்த ஞானமுண்டாகிறதோ அவனிடம் அஞ்ஞானவிருள் போய்விடுகிறது அவன் ஆத்ம ஸ்வரூபனுகின்ருன்.

முன் ஒன்றும் உண்டானதில்லை இப்பொழுது ஒன்றும் உண்டாகப்போவதில்லை ஜகத்து மனோரத விலாசம் அதனடைவையும் நிவர்த்தியையும் ஞானி இச்சிக்கிறதில்லை பார்க்கும்போது பார்க்கிறதில்லை கேட்கும்போது கேட்கின்றதில்லை சகல பதார்த்தங்கள் புசித்தும் புசிக்காதவன் தொட்டும் தொடாதவன் பேசியும் பேசாதவன் முகற்றும் முகராதவன் நான் இந்திரியங்களுக்கெல்லாம் சாக்ஷி கூடஸ்தன் அசங்கன் இந்திரியம் அனுபவித்தாலும் விசயத்தை தியாகம் செய்தாலும் யெனக்கு சம்மதமில்லை யென்று நிச்சய திடபுத்தி யெவனுக்கிருக்கிறதோ அவன் யெந்த காரியம் செய்தாலும் செய்யாதவனுகிருன்.

## சகுண பிரம்மம் நிற்குணப் பிரமமென இரண்டுவிதம்

சகுணத்திற்கு வைகுண்டாதி பிரமலோக பிராப்தி நிற்குணத்திற்கு மோக்ஷப் பிராப்தி வுண்டாகும் இந்தப்படி இரண்டுவிதமுண்டு

பிறகு நிற்குண உபாசனையில் அதிகாரமில்லாதவன் சகுண உபாசனை செய்யவேண்டும் அதுவும் முடியாவிட்டால் நிஷ்காமகற்மஞ் செய்து ராமனை பஜிக்கவேண்டும் தவிர விக்கிரக ஆராதனைச் செய்து மனசஞ்சலத்தை அதாவது விக்ஷேப தோஷத்தை நிவர்த்திக்க அதுவும் முடியாவிட்டால் இறந்து இறந்து பிறந்துக்கொண்டேயிருப்பான் இந்தப்படி சுபசந்ததி மக்கள் ஆச்சாரியரிடம் உபதேசம்பெற்று சாஸ்திரங்கள் பூராவும் தெரிந்துக்கொண்டு மூவரும் தன் தகப்பன் இருக்கும் பட்டணம் வந்து சேர்ந்தார்கள்.

## சுபசந்ததியின் விசாரம் தகப்பனுக்கு சந்தேக நீக்குதல்

சுபசந்ததியரசன் தன் குமாரர்கள் வீட்டை விட்டு போன நாள் முதற்கொண்டு விசனமுற்று மந்தவைராக்கியத்தினுல் உபாசனை செய்யவேண்டியவனுப் புரோகிதற்களையழைத்து சொல்லுகிறுன் நம்ம தேசத்திலுள்ள வித்வான்களையும் பெரியோர்களையும் அழைத்து வர உத்திரவிட்டான்.

அந்தப்படியே எல்லா மதகுருக்களையும் வித்வான்களையும் தருவித்தார்கள் அரசன் யெல்லா வித்வான்களையும் பெரியோர்களையும் பார்த்து நான் தங்களை ஒரு சங்கதி கேட்க்கப்போகிறேன் உலகத்தில் மானிட ஜீவர்கள் யெந்த தெய்வத்தை ஆராதித்தால் நன்மை கிடைக்கும் அந்த தெய்வம் யெது சொல்லீரென்றுன்.

அந்த கூட்டத்தில் ஒரு பண்டிதர் யெழுந்து அரசனே சகல வேதாந்த சிரோன்மணியான வாசுதேவன்தான் பெரியவர் இவரை சிவனும் பிரமாவும் நித்யம் சேவிக்கிறுர்கள் விஷ்ணு பரோபகாரி பக்தருக்கு யிதயஞ் செய்பவன் சகல தெய்வங்களும் அவர் ஆஞ்ஞையினுல்தான் நடக்கிறுர்கள் அவரைத்தான் உபாசிக்கவேண்டியது யென்றுர்.

இதைக்கேட்ட சிவபக்தன் எழுந்து கோபத்துடன் சொல்கிறுன் கேட்டதைக் கொடுப்பதற்கு சிவபெருமானே முதன்மையானவர் அவரைத்தான் உபாசிக்கவேண்டும் மற்ற தெய்வங்களெல்லாம்

சிவனைத்தான் முதன்மையாக வைத்திருக்கிறார் அவனே பூசிக்கத்தக்க தெய்வமென்றார்.

இதைக்கேட்ட கணேச உபாசகன் சொல்லுகிறான் கேளும் அரசனே விஷ்ணுவுபாசகனும் சிவனுடைய வுபாசகனும் சொல்வது பொய் நம்ம கணேசன்தான் முதன்மையானவன் யெந்தவேலைகள் முன்னிட்டு பூஜை செய்தாலும் கணேசன் பூஜை முதலில் செய்கிறார்கள் இது யாருக்கும் தெரிந்த விஷயம். ஆனதால் கணனாதரைத்தான் உபாசிக்க வேண்டும்.

இதைக்கேட்ட சூரிய உபாசகன் அரசனே சூரியனே உலகத்தை பிரகாசிக்கச் செய்பவன் சூரியனில்லாவிட்டால் உலகமேது ஆனதால் சூரியனைத்தான் உபாசிக்க வேண்டும்.

இதைக்கேட்ட தேவி உபாசகன் ஆதியில் சக்திதான் முதலில் பிறந்தவள் மேலே சொன்ன மூர்த்திகளெல்லாம் அவளுடைய சத்தியினால்தான் தெய்வமென்று சொல்லப்படுவது ஆனதால் சத்தி பூஜைதான் மேலானது யென்றான்.

இந்தப்படி இவர்கள் சொல்லிக்கொண்டு வருவதைக்கேட்டு அரசன் யோசித்து எல்லா மதஸ்தரும் சொல்லப்பட்டது நியாயமாகத்தான் இருக்கிறதுயென்று தனக்கு ஒன்றும் தோன்றாமல் மவ்னமுற்றிருந்தான்.

இப்படியிருக்கும் சமயத்தில் யாத்திரைப்போன மக்கள் மூவரும் வந்து தகப்பனை நமஸ்கரித்தார்கள் அவருக்கு அநேக சந்தோடமுண்டாயிற்று மக்களை தழுவி ஆனந்தங்கொண்டார்.

தத்துவதிருஷ்டி தகப்பனை பார்த்து இன்று யென்ன சபையில் நிற்சப்தமாய் நீங்கள் மவ்னமுற்றிருந்தீர்கள் சொல்லுங்களென்றான்.

குமாரா நீங்கள் யாத்திரை போனபின் நான் வியாகூலத்துடன் இருந்தேன் நல்கதியடைய யெண்ணங்கொண்டு யெந்த தெய்வத்தை யுபாசித்தால் மேலான மோக்ஷம் கிடைக்குமென்பதாக சபையி

விருந்த பண்டிதர்களைக்கேட்டேன் அவர்களில் விஷ்ணுவுபாசகன் விஷ்ணுவையும் சிவனுடைய வுபாசகன் சிவனையும் கணேச வுபாசகன் கணேசனையும் சூரிய வுபாசகன் சூரியனையும் சத்தியுபாசகன் சத்தியையும் இந்தடபடி அவரவருபாசனை அவரவர் பெரிதாக சொல்லுகின்றார்கள் இவர்கள் வொவ்வருவரும் சொல்வதும் மேலாகத்தான் இருக்கிறது. எதையான் வுபாசிப்பதென்று மயக்கமுடையவனாகயிருக்கிறேனென்றான்.

தத்துவதிருஷ்டி சொல்கிறான் தகப்பனே இந்த வுலகத்துக்கு கர்த்தா ஒருவனே வியாச பகவான் அவரவர் புராணங்களுக்கு அந்த அந்த தெய்வத்தை பெரிதாக யெழுதியிருக்கிறார் இந்தப்படி யெழுதினால்தான் பக்தியேற்படுமென்று சொன்னதேயல்லாமல் வேரல்ல தெய்வமொன்றே இரண்டு மூன்று இல்லவேயில்லை விஷ்ணு வுலகமென்றும் சிவனுலகமென்றும் சூரியவுலகமென்றும் சத்தியுலகமென்றும் வேருவேராக யில்லை.

இந்த ஐந்து உபாசிகளில் யாவனொருவன் மரித்தாலும் பிரம்ம லோகபிராப்தியுண்டு விஷ்ணுவுபாசகன் பிரம்மலோகஞ்சென்றால் அவனுக்கு வைகுண்டாதிபோல காணப்படுவான் அவிடமிருப்பவர் நாமதாரிகளாய் சங்கு சக்கிரம் தரித்து மகாவிஷ்ணு அவதாரமாய் இவன் புண்ணியத்துக்கு தகுந்தபடி பதவி கிடைக்கும்.

சிவனுடைய பக்தன் மரித்தால் சிவலோகம்போல் சிவபக்தர்கள் சிவகணங்கள் இருப்பதாகவும் சிவபிரான் இவனுடைய புண்ணியத்துக்கு தகுந்த தரிசனம் கொடுப்பார் தக்க பதவியை அளிப்பார்,

சூரியவுபாசகனுக்கு சூரியலோகம் தோனும் சத்திவுபாசகனுக்கு சத்தியலோகம் தோன்றும் இந்தப்படி ஒரே பிரம்மலோகம் யார் யார் யெந்த பாவனையோடு பாவனை செய்கிறாரோ அந்த பாவனையாக அவர்களுக்கு தோன்றும்.

அந்தந்த பக்தர்கள் அவ்விடமே இருந்து கற்பாந்தத்தில் பிரம்மத்தில் கலந்துவிடுகிறார்கள் மறுபடி பிரப்பில்லை. சாமானிய பக்தன் சில நாளிருந்து மறுபடி பிறவிக்கு வந்துவிடுகிறான்.

### பதவிகளில் மூன்று மார்க்கம்

அதாவது தேவயன மார்க்கம் பிதிர்யஹம் ஜயஸ்யமரியஸ்யம் தேவயனமென்பது சூரியமண்டலம் வழியாய் பிரம்மலோகம் போவது பிதுர்யவனமென்பது சந்திரமண்டல வழியாய் பிரம்மலோகம் போவது ஜயஸ்யமரியஸ்ய ஜனனமரணம் பிறந்து பிறந்து இறக்கிறது இரண்டு வழியுடையவர் பிரவியில்லை மூன்ருவது வழியுள்ளவன் அஞ்ஞானி பிறந்திறந்து திரிபவன்.

தந்தையே நீங்கள் சந்தேகமற்று நீர் அனுஷ்டிக்கும் சிவமதத்தையே உபாசித்து மோக்ஷமடையலாமென்று தத்துவதிருஷ்டி சொல்ல அந்தப்படியே சுபசந்ததி சிவபக்தனுகி மக்களுக்கு பட்டாபிஷேகம் செய்து தான் அந்தியத்தில் சிவலோகம் சேர்ந்தான்.

பிறகு தற்கதிருஷ்டியும் அதிஷ்டியும் உபாசனு மூர்த்திமை தியானித்து வந்தார்கள் தத்துவதிருஷ்டி பற்றில்லாத ராஜரீகம் செய்து அந்தியத்தில் விதேக மோக்ஷமடைந்தான்.

(சுபசந்ததியின் விசாரம் முற்றிற்று)

## கபிலர் உபாக்கியானம்



விதுரர் ஒரு சமயம் யாத்திரை புரப்பட்டு கபிலர் ஆசிரமத்தில் தங்கும்படி நேர்ந்தது கபிலரைப்பார்த்து விதுரர் கேள்க்கின்ருர் இந்தபஞ்சமெப்படி உற்பன்னமானது அதை தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

கபிலர் சொல்கிருர் இந்த ஜகத்துற்பத்தியாது அநேகவிதமாய் சொல்லியிருக்கிறது அதில் நாஞெரு விதத்தை சொல்கிறேன் கேளும் ஜீவர்களுடைய திரிகுணத்தினுல் மூன்று குணமுண்டாயின அதிஷ்டான பகவானுடைய பிரகிருதியில் ஆகாய முதலிய பஞ்சபூதங்களும்

ஞானேந்திரிய கற்மேந்திரங்களுமாகிய பஞ்சகமும் கூடிய ஒரு பிரம் மாண்டத்தை பகவான் உண்டாக்கினர்.

அந்த அண்டம் ஜலத்தின்மேல் மிதந்துக்கொண்டிருந்தது அநேக காலமானபின் பிரம்மாவை பகவான் உண்டாக்கினர் மனுவை யுண் டாக்கினர் அந்தமனு அநேக ரிஷிகளையும் பெண்களையும் உண்டாக்கி விவாகங்கள் செய்துக்கொண்டார்கள்.

இந்த மனுவும் ஒரு பெண்ணை விவாகம் செய்துக்கொண்டார் அவள் பெயர் சதரூபி இவளுக்கு சில நாளில் ஒரு பெண் பிறந்து தேவபூதி யென்று பெயர் வைத்தார்கள்

மறுபடி ஆண் குழந்தை இரண்டு பிறந்தது இவர்களுக்கெல்லாம் பிராயம் வந்ததும் சப்த தீவுகளையும் ராஜியம் செய்யும்படி தன் இரண்டு குமாரர்களுக்கும் ஆஞ்யாபித்தார் பெண் பூதேவிக்கு விவாக மாகவேண்டி யோசித்துக்கொண்டிருக்க பகவான் தோன்றி மனுவே நீ உன் பெண்ணை வேதமலையில் தவஞ் செய்துக்கொண்டிருக்கும் கற்தவ பிரஜாபதிக்கு விவாகம செய்துகொடுத்துவிடு என்று சொல் லிவிட்டு மறைந்தார்.

மனுவானவர் தன் மனைவியையும் புத்திரியையும் ரதத்திலேற்றிக் கொண்டு கற்தவ பிரஜாபதியிடம் சென்று ரதத்தைவிட்டு கீழே யிரங்கி கற்தமரைக்கண்டு நமஸ்கரிக்க தாங்கள் வந்த கருத்தென்ன வென்றான்.

சுவாமி எங்கள் குமார்த்தியை தாங்கள் விவாகம் செய்துக் கொள்ளல் வேண்டும் என்றார்.

சரியே ஆனல் விவாகமாய் ஒரு தபாகூடி பிள்ளைகளுண்டான தும் துரவியாய் விடுவேன் இவ்விடமிருக்கமாட்டேன் இதற்கு சம் மதமானல் விவாகம் செய்துக்கொள்வேன் உங்கள் கருத்தென்ன வென்றார். மனுவர் தேவபூதியிடம் சம்மதியை கேட்க்க சதரூபியை கேட்டார்கள் யெனக்கு சம்மதமே யென்றாள் சரியென்று சம்மதம் கொடுத்துவிட்டார்கள்.

அவ்விடமே விவாகத்துக்கேற்பாடு செய்து விவாகம் முடித்து விட்டார்கள் கற்தமரிடம் விடைபெற்றுக்கொண்டு மனுவும் சதரூபியும் ரதமேறி தங்கள் பட்டணம் போய் சேர்ந்தார்கள்.

தேவபூதி யென்னும் பெண்ணானவள் கற்தம பிரஜாபதிக்கு பணி விடை செய்துக்கொண்டே யிருக்கிறாள் மற்ற சுகமடைவதற்கில்லை இந்தப்படியே இருக்க இவளுக்கு மனக்கிலேசமடைந்து இதை கற்தமற் தெரிந்து பெண்ணே யேன் வியாகூல முகமுடையவளாயிருக் கிறாய் உள்ளதை சொல்லென்றார்.

அதற்கு தேவபூதி சொல்லுகிறாள் நான் உங்களுக்கு பணிவிடை செய்ததேயல்லாமல் வேறு சுகம் கிடையாது அதனால் மனம் வாட்ட முற்றது பெண்களுக்கு வேண்டியது புருடர்களிடம் கூடிகளித்து புத் திரர்களைப் பெறுவதுதான் முக்கியமானது அதையடையத்தான் இச்சிக்கிறேன்.

சரி உன் இஷ்டப்படியே செய்யலாம் இத்தனை நாள் உன்னை சோதித்தேன் உன்னிஷ்டத்தை பூர்த்தி செய்கிறேன் யென்று சிறிது நேரத்தில் தன் சித்து வலியால் மாடமாளிகை கூடகோபுரம் பார்க்கு சோலைகள் தடாகங்கள் உண்டாக்கி விட்டார்.

பெண்ணே அதோ அந்த தடாகத்தில் குளித்து வாவென்றான் அந்தப்படி தடாகத்திலிரங்கினாள் இரங்கியவுடன் தோழிகள் அநேகம் பேர் இவளை சூழ்ந்து அம்மா நாங்கள் உனக்கு தோழிகள் பணிவிடை செய்ய வந்தோமென்று ஒருவள் எண்ணையிடுகிறாள் ஒருத்தி தலைக்கு வாசனை திரவியங்களினால் தேய்த்து கழுவுகிறாள் ஒருத்தி மஞ்சளா ரைக்கிறாள் இந்தப்படி ஸ்னானம் முடிந்தது வீட்டில் அரண்மனையில் அநேக தாதிகள் சமையல் செய்துக்கொண்டிருப்பதை பார்த்தாள் மறுபடி தாதிகள் அலங்காரமெல்லாம் செய்துவிட்டு கண்ணாடியை கையில் கொடுத்து முகத்தை பாருமென்றார்கள் இவள் சரீரம் சொர் ணமயமாயிருந்தது இப்பொழுதல்லவோ யென்னையகனை யணையவுகந்த வளென்று நினைத்தாள் திரும்பி பார்க்க புருஷனும் ராஜவடிவமாக இருக்கக்கண்டாள் இவர் ஆனந்தமாக தழுவிக்கொண்டார்.

பின் ரதமுண்டாக்கி அந்தரத்திலாரோகணித்து பூலோகத்தையே இருவரும் பிரதக்ஷணம் செய்துவந்து மறுபடி தங்கள் இருப்பிடம் சேர்ந்தார்கள்.

தாதிகளால் உண்டி முதலானதும் செய்துக்கொண்டார்கள் அன்று இரா பூராவும் ஆனந்தகளிப்புடன் இருந்தார்கள் ஒன்பதுதபா அன்று இராத்திரி சேர்ந்து கூடினார்கள் விசயசுகமனுபவித்தார்கள் அப்பொழுது ஒன்பது பெண்குழந்தை பிறந்தது கற்தமர் நான் தவஞ்செய்ய போக உத்திரவு கொடுக்கவேண்டியதுதான் என்றார்.

அதற்கு தேவபூதி சொல்லுகிறாள் சுவாமி நான் பிரதிக்ஞை செய்தது வாஸ்தவமே சறணமாகவடைந்த யென்னை அனாதியாய் விட்டுப்போவது நியாயமா யென்னை மன்னித்து பாலகர்கள் கொஞ்சம் வயதுவந்தமேல் போகலாமென்றாள்

கற்தமற் சொல்கிறார் நீ பாக்கியவதியே நான் இவிடமிருப்பது நியாயமாகாது யென்று சொல்லிக்கொண்டிருக்கையில் பிரம்மதேவர் வந்து கற்தமரே இன்னம் சிலகாலமிருந்து விசுவகர்த்தாக்களுக்கு உன் மக்களை விவாகம் செய்துகொடுத்துவிட்டு போகலாமென்று சொல்லி மறுபடி இன்னும் ஒரு ஆண் குழந்தை உண்டாகவேணும் பகவானே அவதரிக்கிறார் யென்று சொல்லி மறைந்தார்.

மக்களுக்கு பிராயம் வந்ததும் பிரம்மன் உத்திரவுப்படி ரிஷிகளிருக்குமிடம் ஒன்பது பெண்களையும் கூட்டிக்கொண்டு போனார். ஒன்பது ரிஷிகளுக்கும் ஒன்பது பெண்களை விவாகம் செய்துகொடுத்தார்.

## விவரம்.

ஆங்கிரீசனுக்கு—சிரத்தையென்னும் கன்னிகையை
அத்திரிமகாரிஷிக்கு—அனுசூயை யென்னும் கன்னிகையை
புலத்தியனுக்கு—அவிர்ப்பூவை யென்னும் கன்னிகையை
புலகனுக்கு—கதியென்னும் கன்னிகையை

கிருதமகரிஷிக்கு—கிரியை யென்னும் கன்னிகையை
பிருகுமகரிஷிக்கு—கியாதியென்னும் கன்னிகையை
வசிட்டனுக்கு—அருந்ததி யென்னும் கன்னிகையை
அதற்வணனுக்கு—சாந்தியை யென்னும் கன்னிகையை

இந்தப்படி ஒன்பது பேருக்கு ஒன்பது கன்னிகைகளை விவாகம் செய்து கொடுத்துவிட்டு தன் இருப்பிடம் வந்து பகவானுடைய உத்திரவுபடி சிலகாலமிருந்து ஒரு ஆண் குழந்தை பிறந்தது அவர் பகவானே அவதாரமாய் வந்ததினால் கபிலமுனி யென்று நாமகரண மிட்டு சிலகாலம் இருந்து கற்தமர் தவஞ்செய்ய வனம் சென்றுவிட்டார்.

கபிலர் பிராயம் வந்தவுடன் வேத பாடங்களை ஒரு ஆச்சாரிய ரிடம் கற்று ஞானசிரோன்மணியாய் விளங்கினார்.

கபிலர் தாயார் தன் மகனிடம் அப்பா உன் தகப்பனிடம் பிரம்ம வித்தையை உபதேசிக்கக் கேட்டேன் அவர் உன்னிடம் தெரிந்துக் கொள்ளலாமென்று சொல்லிவிட்டார். ஆனதால் அந்த வித்தையை யெனக்கு உபதேசிக்கவேண்டும் யென்று கேட்டுக்கொண்டாள்.

தாயே எந்த ஞானத்தை அடைய வேண்டுமோ அதை யான் உனக்கு உபதேசிக்கிறேன் கேட்பாயென்று சொல்லத்தொடங் கினார்.

சத்தாகியும் சித்தாகியும் ஆனந்தமாகியும் இருக்கும் பரபிரம்ம வஸ்துவாகிய ஏகநாதனையடைந்து சுகம்பெறுவது அத்யாமீக யோக மென்று சொல்லுவார்கள் அதை நீயடையக்கடவாய்.

மோகத்துக்கும் பாவத்துக்கும் காரணமான இந்த மனதை சம பாவனையாக கொள்ளல்வேண்டும். மனதை சமப்படுத்தி பகவானி டம் ஐக்கியப்படுத்துவதுதான் மோக்ஷ நிலை. அதாவது அசத்தான விஷயத்தில் செல்லுகின்ற மனதை திருப்பி சத்தான விஷயத்தில் செலுத்தி நிறுத்துவதுதான் மோக்ஷம் இந்தப்படி கபிலர் தாயாருக்கு

வுபதேசித்து ஆத்ம ஞானத்தை யடையும்படி செய்தார் பின் கபிலர் தானும் பிரம்ம ஞானியாய் அநேக ரிஷிகளுக்கும் ஞானவுபதேசம் செய்துக்கொண்டிருக்கிறார். விதூரருக்கு இந்த கபிலர் தன் பூர்வோத்திரமும் ஜகத்துர்ப்பத்தியும் சொல்லி முடித்தான். பின்பு விதூரர் கபிலரிடம் விடைபெற்று யாத்திரை செய்ய புறப்பட்டான்.

(கபிலர் ஞானம் முற்றிற்று)

## யோகப்பிராம்மணன் கதை.

ஒரு பிராமணன் தன் பெண்சாதியை கூட்டிக்கொண்டு சிதம்பரம் போனான் சுவாமி தரிசனம் செய்துவிட்டு ஸ்தல வாசம் செய்துக்கொண்டிருக்கையில் அன்று பிரதோச விரதம்: அன்று சாயந்திரம்தான் ஆகாரம், ஆனதினால் சாயங்காலமானதும் தன் பெண்சாதியை சமையல் தயார் செய்யும்படி சொல்லி சமையல் தயார்செய்துக்கொண்டிருக்கிறாள் — இந்த பிராமணன் ஒருயிடம் உட்கார்ந்துகொண்டிருக்கிறான் -- பெண்சாதியை யேடி வண்டமயிந்தா வென்று கேட்டான் அவள் கொஞ்சம் பொத்தவ்னு என்று சொல்லிவிட்டாள் இந்த பிராமணனுக்கு யோகப் பழக்க அப்யாசம் தெரியும், சரி அதுவரை பிராணாயாமம் செய்யத் தொடங்கினான்.

இவனுக்கு வயிற்றில் ஆகாரமில்லாததினால் யோகப்பழக்கத்துக்கு இது சவுகரியமாய்விட்டது ரேசகபூரகம் செய்து கும்பகத்தில் மனம் லயமாய்விட்டது. பிரம்மரந்திரத்தில் அய்க்கியமானதினால் பெண்சாதி புருஷனை கூப்பிட்டாள் பேசவில்லை யேடி கோபமா வண்டம் அய்யிந்தி யென்றாள் அதற்கும் பேசவில்லை அவரிருக்குமிடம் வந்து பார்த்தாள் கண்ணை மூடிக்கொண்டு இருப்பதைப் பார்த்து தூக்கமென்பதாக தட்டினாள் அதற்கும் பேசவில்லை ஓ வென்று அழத்தொடங்கி விட்டாள்.

அவிடமிருந்த குருக்கள்மார்கள் ஓடிவந்து பார்த்தார்கள் இவர் மனம் லயப்பட்டிருக்கிறது கையில் தாது நடக்கிறது இவர் சமாதியி லிருக்கிறார் இவரைத் தொடப்படாது தூர நில்லுங்களென்று சொல்லி விட்டு பெண்சாதியிடம் நீ இவிடமே கொஞ்சநேரம் இருந்தால் அவர் மனம் வெளிவரும் அதுவரை சும்மாஇருவென்று சொல்லி தைரியம் சொன்னார்கள் பெண்சாதி அன்று இரா பூரா இருந்தாள் மருபடி ஒரு நாள் பூராவும் இருந்தாள் மனம் பகிர்முகமாகவில்லை யென்ன செய் வாள் எட்டுநாள் ஆச்சுது அப்பவும் வரவில்லை இவளுக்கு மறுபடி இருக்க இஷ்டமில்லை தங்கள் ஊருக்கு போய்விட்டாள்.

இவிடம் கோவில் குருக்கள் அவரை பார்த்துக்கொண்டார்கள் ஒருவருஷமாச்சுது 10 வருஷமாச்சுது மனம் வரவில்லை பெண்சாதி அவிடமிருந்து வந்து பார்த்துவிட்டு மறுபடி ஊருக்கு போய்விடு கிறது.

மருபடி பனிரண்டு வருஷமாய்விட்டது மனம் வெளிவந்தது வந்தவுடன் வண்டம் அய்யிந்தாவென்றான் அவிடமிருந்தவர்கள் நீங் கள் இவிடம் வந்து உட்கார்ந்து பனிரண்டு வருஷமாய்விட்டது நீர் சமாதியிலிருந்தீர்கள் உங்கள் பெண்சாதி ஊருக்கு போய்விட்டாள் என்றுசொல்ல சரியென்று அவரும் பெண்சாதியிடம் போய் சேர்ந் தார்.

(யோகப்பிராமணன் கதை முற்றிற்று)

## வாமனரிஷி சித்து.

வாமன ரிஷியானவர் பிரதிபந்தத்தோடு தத்துவ ஞானம் வந்தபின் அகஸ்திய முனிவரிடம் சென்று அணி மாசித்திகளை கற்றுக்கொண்டு உலகமெலாம் சித்துவிளையாட்டை காண்பித்து தானே மேலானவனென்று கற்வித்து காசிக்ஷேத்திரத் தில் வந்து அவிடமிருக்கும் ஆஜானயோகீஸ்பரரிடம் வந்து அவரிடம்

தன் சித்தின் வலிமையைக்காட்டி புகழையடைய வேண்டுமென்பதாக யெண்ணி யெனக்கு அணிமா முதலான ஆகாயகமனம் முதலானதும் தெரியுமென்பதாக அவரிடம் புகழ்ந்து தான் கற்ற சித்துகளை யெல்லாம் காட்டினார் வாமனருடைய சிஷ்யர்கள் நீ செய்தது சரியே இதனால் யென்ன பிரயோஜனமென்றார்கள்.

அதிலொரு சிஷ்யன் ஒரு இலவம் பஞ்சியை யெடுத்து ஆகாயத்தில் காற்று வாக்கில் விட்டு மேலே பறக்கவைத்து இதற்கும் உன்னுடைய சித்துக்கும் யென்ன வித்தியாசம் சொல்லென்றான்.

அப்படியா நான் யெவ்வளவோ பிரயாசைப்பட்டு கற்ற வித்தையை கேவலப்படுத்துகிறீர்களா இதோ ஒரு வித்தை செய்கிறேனென்று குளவி ரூபமெடுத்து பூமிக்குள் நுழைந்து வந்தான் இதைப் பார்த்த அஜான யோகிகள் நீங்கள் செய்த வித்தை மண்குளவிகூட செய்கிறதல்லவா இதிலென்ன பிரயோஜனமிருக்கிறதென்று நகைத்தார்கள் நான் கற்ற வித்தை பெரிதல்லவா வென்றான் இது பெரிதல்ல இது வெறும் வித்தையே மேலான பிரஹ்ம்ம வித்தை கற்றுக்கொள்ள வேண்டும் அதினால்தான் மோக்ஷம் கிடைக்கும் அதை விட்டு ஆத்ம ஞானம் தெரிந்துக்கொள்ளென்றான் அதை நீங்களே வுபதேசியுங்களென்று அவரால் தெரிந்து ஆத்ம ஞானமடைந்தார்.

(வாமனர் சித்து முற்றிற்று)

# யோகாப்பியாசக்கிரமம்.

யோகிகளுக்கு யோகத்தினுடைய சித்தியடையும் கிரமத்தை சொல்கிறார். பரமசிவன் பார்வதிக்கு கைலாயகிரியில் யோகத்தினால் சித்தி முத்தியடையும் கிரமம் சொல்கிறார் கேளும் பெண்ணே முன்னடிசித்தியடையும் கிரமம் சொல்கிறேன்.

சூரியன் உதயத்துக்கு முன்னதாகவோ அல்லது சூரியன் உதயமான பிறகோ எழுந்து சுத்தமான இல்லத்திலே மெதுவான ஆச

னம் பரப்பி அதிலமர்ந்து குருவையும் ஈஸ்வரனையும் தியானித்து தன் எண்ணம் சித்தியடையவேணுமென்று பிரார்த்தனை செய்து அதன்பின் பத்மாசனம் அல்லது சுகாசனம் போட்டு அப்யாசம் செய்யவேண்டியது. நேராக நிமிர்ந்து உட்காரவேண்டும்.

பின்பு ரேசகம் பூரகம் கும்பகம் செய்யவேண்டும் முதல் நாள் பத்து கும்பகம் செய்யவேண்டும் இரண்டாவது நாள் பதினைந்து கும்பகம் செய்யவேண்டும் மூன்றாவது நாள் இருபது இந்தப்படி தினம் ஐந்து கும்பகம் அதிகமாகவே செய்து எண்பது கும்பகம்வரை வந்துவிடவேண்டும்.

இதை சற்குருவின் உத்திரவுபடி அவர்கள் யென்ன முத்திரை சொல்கின்றாரோ அந்தப்படி செய்யலாம்.

இந்த அப்யாசம் முடிந்தவுடன் எழுந்து வெண்ணீர் ஸ்நானம் செய்தல் வேண்டும் நித்ய கர்மத்தை சுருக்கமாய் முடித்து மத்தியானத்திலும் கொஞ்சம் யோகாப்பியாசம் செய்து போஜன மருந்தலாம்

யோகிகள் பத்தியமாகவே சாப்பிடவேணும் அபத்தியம் ஒரு நாளும் செய்யலாகாது. போஜனம் செய்தபின் ஏலமாவது இலவங்கமாவது தின்னல்வேண்டும். பிராணயாமம் செய்பவர் வெத்திலைபாக்கு போடக்கூடாது. ஏனென்றால் அவர்களுக்கு சுண்ணும்பு சேரக்கூடாது.

போஜனமானதும் ஞானசாஸ்திரம் அல்லது புராணமாவது படித்தல் வேண்டும் சாயந்திரம் மூன்று நாழிகை பொழுதிருக்க யோகாப்பியாசம் செய்யவேண்டும் இராத்திரியிலும் செய்யலாம்.

## முத்திரைகள்.

மகாமுத்திரை மகாபந்தம் மகாவேதம் கேசரி உட்டியாணம் மூலபந்தம் ஜாலந்திரபந்தம் விபரீதகரணி வஜ்ஜிரவாலி சக்த்திசாலனம் யென்று பத்து முத்திரைகள். இதுகளை அப்யாசித்து சித்தியடைந்தவர்களுக்கு ஜரா மரணத்தை போக்குவார்கள்

கபிலாதி சகல சித்தர்களும் அணிமாதி அஷ்டசித்துகளினால்தான் சித்தர்களானார்கள் இதன் விவரங்கள் அடயோகதீபிகையில் 162-ம் பக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(யோகாப்பியாச க்ரமம் முற்றிற்று)

## ராஜயோகம்



பரமேஸ்பரனை பார்வதி கேழ்க்கின்றாள் ராஜயோகமென்பது யெப்படி அதைச் சொல்லவேணுமென்பதாக வேண்டிக் கொள்ள பரமேஸ்வரன் சொல்கிறார். கேளும் பெண்ணே ராஜயோகத்தை சொல்கிறேன்.

முன் சொன்னபடி சுத்தமான யிடத்தில் பத்மாசனம் போட்டு நாசிகா துவாரத்திலிருந்து ஒரு தரம் வாயுவை இழுத்து இரண்டு மூக்கை இரண்டு விரலினால் மூடி இரண்டு காதுகளை இரண்டு விரலால் மூடி குதஸ்தானமும் நேராய் ஸ்திரமாய் உட்கார்ந்துக்கொண்டு யிருப்பது இதை சண்முகி முத்திரையென்று சொல்வார்கள்.

இதற்கு ரேசகபூரகம் காரணமில்லை முதல் ஒருதரம் ரேசகம் செய்தால் போதுமானது ஒருதரம் கும்பகம் செய்யவேண்டும் பூரக மொருதரம் செய்துவிடவேண்டும் மறுபடி கூடாது.

பின் திருஷ்டியானது ஹிருதய ஆகாசத்தில் காமகுரோதாதி இல்லாமல் பார்த்துக்கொண்டேயிருந்தால் அவிடம் பிரகாசம் காணப் படும் இது சற்குரு சொன்ன ரகசியம் பத்து தினம் இந்த அப்யாசம் செய்தால் மனம் வசப்பட்டு சாம்ராஜ்யம் சித்திக்கிறது.

அந்த காலத்தில் சர்வ துக்கம் நாசமாய் அமுர்ததாரை யுண்டாகும். நிரந்தரம் கும்பகம் செய்தால் அதாவது மனதை நிறுத்தி நிறுத்தி சாதித்தால் அது சித்தியானால் பரவஸ்துவாய் நிற்பன் தவிர கண்டா நாதம் கேட்கும் காமகுரோதாதி தோஷங்கள் ஜனனமரணங்களும் நாசமாய்விடும்.

(ராஜயோகம் முற்றிற்று)

# யோகமும் மகாவாக்கியமும்



தவத்தினால் இந்திரியங்களை அடக்கிய மஹான்கள் யோகத்தினால் சம்சார சாகரத்தை கடக்கிறார்கள் இது எல்லாம் புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

சங்கை...............கபிலமுனியும் தேவரிஷிகளும் சொல்லியிருக்கிறார் கருட புராணமும் வாசிட்டத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது தத்துவமசி முதலான வாக்கியங்களினாலும் மகா வாக்கியங்களினாலும் அபரோச்ச ஞானம் சொல்லியிருக்க அதிகபிரயாசையுடன் சாதிக்கப்படும் யோகத்தினால் அதிக பிரயாசைப் படுவானேன்.

மகாவாக்கியம் சொல்லும் ஞானம் பிரமாணமில்லை யென்று சொல்லலாகாது தத்துவமசி முதலிய வாக்கியங்களில் உண்டாகிய ஞானம் அபரோச்சமேயாம்.

விசயத்திலுள்ள அபரோச்ச தன்மையானது வடிவமில்லாதிருத்தலால் சித்தியாது யென்று சொல்லலாகாது சற்ப முதலிய தோஷமுடையவனுக்கு இது சற்பமல்ல இது ரஜ்ஜு வென்று வாக்கியத்தினாலுண்டாகும். விருத்தியோ ஆவரணத்தை நிவர்த்திக்கிறதில்லை ஆகையினால் விஷயம் பரோச்சமே.

வேதத்தில் மகாவாக்கியத்தினாலுண்டாகும் ஆவரணத்தை நிவர்த்திக்கிறது அதனால் அபரோச்ச ஞானம் சித்திக்கிறது.

சுருதியிலடைப்பட்ட உபநிசத்து மாத்திரந்தான் அரியப்படும் யோகத்திலரியப்படும் தன்மையில் பொருத்தமுடையதாகாது ஆனதினால் தத்துவமசி முதலான வாக்கியங்களின் மகாவாக்கியங்களினாலே அபரோக்ஷமுண்டாமெனின் — அப்படியல்ல.

அனுமானம் அப்பிரயோஜனம் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு முற்கூறிய அச்சாமானியமில்லை யோகிகளுக்கு தூரதிருஷ்டி சமாதியுண்டாகிறது பதார்த்தங்களின் ஞானமுண்டாகிறது இது சகல சாஸ்திர பிரசித்தம்.

யோகிகள் தூரத்திலுள்ள சூச்சம பதார்தமும் ஆத்மாவையும் யதார்த்தமாக அறிகின்றனர் சமாதியில் உண்டாகும் பிரம்மை யெதார்த்தமென்றும் யோகமுடையவனே மோக்ஷமடைவன் யோக மில்லாதவன் மருபிறப்பு பிறப்பன் இறக்கும்போது யார் யார் யெந்தப்படி நினைவு வருமோ அந்தப்படியே பிறக்கிறான் யோகிகளுக்கு சித்தர்களுடன் சேர்க்கையுண்டு சித்தர் கிருபையால் யோகி யாகிறான் வேறு விதத்தினுலாகிறதில்லை.

சங்கை...........ஞானத்தினுல்தான் மோக்ஷமுண்டாகு மென்று சொல்கிறீர்களே ஆனதால் யோகத்தில் யெப்படி மோக்ஷமுண்டாகும்

சமாதானம்—முன் ஜன்மத்தில் யோகம் செய்ததினுல்தான் ஜனகாதிகள் இந்த ஜன்மத்தில் ஞானமடைந்தார்கள் சுளி முனையில் வாயு யெவ்வளவு காலம் அதிகமாய் நிற்கிறதோ அவ்வளவும் ஆயுள் விருத்தியாகிறது சமாதியிலிருக்கும் யோகிகளுக்கு ஆயுள் விருத்தியாகிறது மரணகாலமறிந்து யோகி தன்மனதை பிரம்மரந்திரத்தில் நிறுத்திக்கொள்கிறான். காலனை செயிக்கிறான் சுயேச்சையாக பிராணனைவிட நினைத்தாலும் விட்டுவிட யோகிக்கு வழியுண்டு.

வாயு வொடுங்கில் மனமொடுங்கும் மனமொடுங்கில் வாயு வொடுங்கும் இரண்டும் லயமானுல் சொரூப நிலையென்று பொருள் நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினென் புராணம் இதுகளெல்லாம வேசியைப்போலவாம் ராஜயோகம் சாம்பவிமுத்திரை முதலானதுகள் குலஸ்ரீகள் போலவாம் இது ரகசியம்.

(யோகமும் மகாவாக்யமும் முற்றிற்று)

## சாம்பவிமுத்திரை.

---

இரண்டு கண்களையும் மூடுவதும் திறப்பதும் கூடாது ஒரே பார்வையாய் பார்ப்பது கேசரி முத்திரைக்கு புருவ நடு பார்வை சாம்பவிக்கு ஹிருதய பாவனை இதை யப்யாசித்தால் சித்த லயமுண்டாகிறது.

## கேசரி முத்திரை.

இடது வலது நாடிகளில் செல்லும் நாடிகளை சுஷுமுனையில் நிற்க வைத்தல் இதில் வெளி ஆகாசம் தோன்றும் அந்த ஆகாசத்தைப் பார்த்து சகலமும் பிரம்ம மென்று பாவித்து மறுபடி அதை மறந்து நிலை நிற்பதுதான் ஜீவன்முத்தி இது கேசரி முத்திரை .

## உன்மணிமுத்திரை.

இரண்டு கண்ணை நாசி நுனியில் கூட்டுதல் புருவத்தை கொஞ்சம் மேலே தூக்குதல் இதை அப்யாசித்தால் ஜோதியுண்டாகும் மருபடி பாதிக்கண்மூடி சுஷுமுனை நோக்கி தியானம் செய்யில் பிரகாசமுண்டாகும் அதனால் மனோல்யமாய்விடும்.

சாம்பவிமுத்திரை முற்றுற்று

# மனோலயம் நாதானு சந்தானம்



உலகத்தில் பரமேஸ்பரனால் ஒண்ணேகால் லக்ஷம் சமாதி பேதம் சொல்லப்பட்டிருக்கிறது அதில் முக்கியமானது மனோலய நாதானுசந்தானமே முக்கியமானது அதைச் சொல்கிறேன் கேளும்.

இரண்டு சுண்டுவிரலால் இரண்டு காதுகளையும் செவ்வையாய் மூடிக்கொண்டால் ஜடராக்கினியால் சப்தமுண்டாகின்றது இதை தினம் இரண்டு நாழிகை யெவன் அப்யாசித்து வருகிறானோ அவன் மிருத்தியுவைக் கெடுத்து தான் விரும்பின வண்ணம் யெல்லா சித்திகளையுமடைவான்.

நித்தியம் இரவில் அப்யாசிக்கவேண்டும் நூறுவயது கிழவனும் இதை அப்யாசித்து மிருத்யுவை ஜயித்து சரீர நடுக்கம் கொடுக்காமல் தீர்க்கவாரோக்கியம் பெருவான்.

ஓங்காரமன்று பீஜமன்று அச்சரமன்று சப்தமாத்திரத்தில் பரம சிவமாதல் இதையனுசந்தானம் பண்ணினல் ஒன்பது வகை நாதங்கள் உண்டாகும் அதாவது (1) சமுத்திரகோசம் (2) வெண்கலசப்தம் (3) கொம்புநாதம் (4) மணி சப்தம் (5) வீணை நாதம் (6) புல்லாங்குழல் நாதம் (7) துந்துமி சப்தம் (8) மேககர்ஜனை இந்தப்படி சப்தமறியலாம்

இந்த சப்தங்களில் ஓங்கார சப்தமாக கவனித்தால் அதே நமக்கு உதயமாகும் இதனல் மனோலயமாய் மோக்ஷத்துக்கு யேதுவாகிறது தினம் அப்யாசித்து வரும்போது இவனுக்கு காலம் முடிவுக்கு பிராணன் போக ஆறுமாதமிருக்க இந்த சப்தமே நின்றுவிடும் இதைத் தெரிந்து இவன் விடாப்பிடியாக ஏழுநாள் இராப்பகலாக விடாமல் இதை அப்யாசித்தால் மறுபடி முன்போல சப்தமுண்டாய்விடும் அப்போது மிருத்தியுவை ஜெயித்தவனுகின்றான் மறுபடி மரணமுண்டாகாது ஒன்பதுவித நாதத்தில் ஒன்பதுவித சித்திகள் உண்டாகின்றது இது கோரகரால் சொல்லப்பட்டது.

## சித்தியின் விவரம்.

கோசஒ சப்தம்—ஆத்மசுத்தி சர்வ வியாதி நிவர்த்தி வசியா கிருஷ்ண முண்டாகிறது.

வெங்கல சப்தம்—இதனல் விஷம் தீண்டாது பூதகிரகங்களை கட்டும்

கொம்பு சப்தம்—அபிசாரத்திலும் வித்துவேஷ உச்சாடனை மாரகம் அணுகாது.

வீணை சப்தம்—தூரதிஷ்டியுண்டாகிறது

புல்லாங்குழல் சப்தம்—சற்வஞ்யத்வம் உண்டாகிறது

துந்துமி சப்தம்—ஜனன மரணம் நீங்குகிறது

சங்கு சப்தம்—தான் கருதிய வடிவம் பெறுதல்

மேக கர்ஜனை ஆகாய கமனம் சற்வஞ்யம் சற்வதரிசியுமாவான்

மணிசப்தம்—நினைத்த காரியம் சித்தி தேவர் ரம்பை முதலானவர்களும் வசியமாவர் விரும்பியது சித்தியாகும்.

கோசத்தில் மனோலயமாகி பிரமத்தையடையலாம் மற்றது சித்திகள் மாத்திரம் சொல்லப்பட்டது ஒன்பதுக்கும் ஒன்பதுவித சித்தி

யுண்டாகிறது முன் ஒன்றை அப்யர்சித்து அதை சித்தி செய்துக் கொண்டு மறுபடி ஒன்றை பிடிக்கவேண்டும் யெந்த சித்தி வேண்டுமோ அந்த சப்தத்தை கவனித்தால் அதே சப்தம் நமக்கு உண்டாகும்.

பூர்வ புண்யம் செய்தவற்கு இது கிடைக்கும் மற்றவர்களுக்கு துற்லபம் இதில் அநேக ரோகங்கள் நிவர்த்தியாகும். பூர்வ புண்ணியமிருந்தால் சித்தர்களே வந்து நமது குறையை தீர்த்து அவருடன் கூட்டுறவாக்கிக் கொள்வார் குருவில்லாமல் சித்தியாகிறது அரிது.

நாம் இந்த சித்தை விரும்பாமல் ஞானத்தையடைய கோசநாதத்தை பிடிப்பதுதான் மேலானது இந்த நாதபிரம்மத்தில் சித்தியும் முத்தியுமடையலாம் இதை யடைய சற்குரு கிருபையாலும் ஈசனுடைய கிருபையாலும் அடையத்தக்கது.

(மனோலய நாதானு சந்தானம் முற்றிற்று)

# ஜீவன்முத்தி லக்ஷணம்.

வினா—ஜீவன் முத்தி யென்பது யாது?
விடை—தேகாதி பிரபஞ்சம் தோன்றிக்கொண்டிருந்தும் பிரமாய் நிலைத்தல் ஜீவன் முத்தியாம்
வினா—ஜீவன் முத்தியில் தோன்றுவதற்கு காரணம் யாது?
விடை—ஆவரணம் விச்சேபமென்று விரண்டு இது அவித்தையின் சத்திகளாம் அவற்றுள்

(2) அவரண சக்தி ஞானத்தால் நாசமாகிறது ஆனால் ஞானிக்கு வேறு பிறப்பில்லை.

(3) விச்சேப சக்தி (அவித்தையாலேசம்) பிராரத்தபலன் வறுத்த விதையைப்போல ஆனால் ஜீவன்முத்தியில் பிரபஞ்சத் தோற்றமுண்டாகிறது.

(4) ரஜ்ஜு ஞானத்தால் சற்பபிராந்தி நீங்கிய பின்னும் நடுக்க முதலியவை தோன்றுவதுபோல கண்ணாடியை பார்ப்பவனுக்கு பிரதி பிம்பம் தோன்றுவதுபோலவும்.

வினு—விதேக முத்தியென்பது யாது?

விடை—பிரபஞ்ச பிரதீதியில்லாமல் பிரஹ்ம சொரூபமாய் நிலைத்தல் விதேகமுத்தியாம்.

வினு—பிராரத்தமுடிந்தகாலத்தில் காரியத்தோடு அஞ்ஞானலேசம் யெந்த சாதனத்தால் லயமாகிறது.

விடை—பிராரத்தமுடிந்த கர்மத்தின் முடிவில் அதிக அல்லது குறைந்த மூர்ச்சை காலத்தில் பிரம்மாகார விருத்தி சம்பவி யாது வித்து வானுக்கு விதியுமில்லை யென்றாலும் சுளுத்தி யைப்போல மூற்சைகாலத்திலும் பிரம்ம வித்தையின் சமஸ் காரமிருப்பதால் ஆரூடமாகிய சேதனத்தால் அஞ்ஞான லேசம் நாசமாகிறது பிறகு கட்டையிலுள்ள அக்கினியினல் துரும்பு முதலியவை நாசமாவதுபோல சமஸ்காரத்திலுள்ள பிரபஞ்சம் நாசமாக தானும் சமஸ்காரமும் நாசமாகிறது பிறகு அசங்க சுத்த சச்சிதானந்த சொப்பிரகாசம் தானே தானகிய பிரம்மம் மிஞ்சுகிறது.

(ஜீவன்முத்தி லக்ஷணம் முற்றிற்று)

## நசிகேது கதை.

### ஆத்துமபுராணம்

### (கடோபநிஷத்து)



ஒரு பட்டணத்தில் அருணகிரி யென்னும் உத்தாலகன் பிராம் மண குலம் ஒரே குமாரன் இந்த உத்தாலகன் அன்ன தானத்தில் கீர்த்திபெற்றவன் இவர் சர்வ சித்து யென்னும் யாகம் செய்து தன்னிடமிருக்கும் பொருள்களைப் பூராவையும் தானம்

செய்துவிடுவதாகவும் மறுபடி தான் தவஞ்செய்ய போய்விடுவதாகவும் நிச்சயம் செய்துகொண்டார்.

தன் புத்திரன் ஐந்துவயது நசிகேது வென்று நாமமுடையவன் அவன்பேரில் தகப்பனுக்கு அதிகப்பிரியமுள்ளவனாக யிருந்தான்.

அவன் வீட்டில் கோக்களாகிய பசுமாடுகளே அதிகமானது தன்னிடமுள்ள கோக்களை இரண்டாக பாகம் செய்து பாதி தன் மகனுக்கும் பாதி கோக்கள் பிராமணருக்கு தானம் கொடுக்கவைத்துக் கொள்வதென்று அந்தப்படியே இரண்டாகப்பிரித்துக்கொண்டான்.

மகன் பேருக்கு பாகம் செய்துக்கொண்ட பசுக்கள் பால் கரக்கும்படியான நல்ல பசுவாகவும் இளம் பிராயமுள்ளதாகவும் வைத்துக் கொண்டான் தன் பேருக்கு வைத்து தானம் செய்யும் பசுக்கள் பிராயம் அதிகமுள்ளதாயும் பால் குறைவாக இருப்பதாயும் கரவையில்லாததாயுமுள்ள பசுவைத் தானம் செய்ய ஆலோசித்தான்.

இதைத் தெரிந்த நசிகேது ஐந்து வயதுடையவனானாலும் புத்தி கூர்மையுள்ளவன் தன் தகப்பனிடம் சொல்லுகிறான் தாங்கள் பசுக்களை தானம் கொடுக்கிறீர்கள் நல்ல பசுக்களை யெல்லாம் யெனக்கு கொடுத்துவிட்டு பால் கறக்காத பசுக்களை பிராமணர்களுக்கு தானம் கொடுத்தால் அதனால் அவர்களுக்கு துக்கமே யல்லாமல் சுகமில்லை தானம் வாங்கிப்போனவர்கள் சுகமடையவேண்டுமல்லவா பசுக்களெல்லாம் உங்களுடையது போல நானும் உங்கள் தனமே யென்னையும் தானம் கொடுத்துவிடுங்கள் யென்னை யாருக்கு தானம் செய்கிறீர்கள் யென்றான்.

தகப்பன் பேசவில்லை மறுபடியும் அந்தப்படியே சொன்னான் சும்மாவிருவென்றான் மருபடியும் கேட்டான் தகப்பன் கோபமுற்று உன்னை யெமனுக்குத்தான் கொடுப்பது யென்றான் இந்தப்படி சொன்னதைக்கேட்ட நசிகேது சிந்திக்கிறான்.

நான் கேட்டதற்கு நம்ம தகப்பனுக்கு கோபத்தினால் சொல்லிவிட்டவார்த்தை அவருக்கே துக்கமுண்டாகும் வழி வந்துவிட்டது

தகப்பன் தனக்கே துக்கம் தேடிக்கொண்டான் தகப்பனுடைய வார்த்தை நான் காப்பாற்றவேண்டியதே.

எண்ணும் வண்ணமியற்றுவ னுத்தமன்
வண்ணமத்திபன் வாய்சொல் செய்பவன்
நண்ணதமன் நழுவியநேயனைப்
பண்ணுகிற்பவன் பண்ணுகிலானுமே

தகப்பன் குருசொல் வார்த்தையை மனதில் நினைத்தவுடன் செய்பவன் உத்தமன் அவர் கூறிய காரியத்தை சிரத்தையுடன் செய்பவன் மத்திமன் கூறிய காரியத்தை அசிரத்யையுடன் செய்பவன் அதமன் இந்தப்படி சாஸ்திரம் சொல்லப்பட்டிருக்கிறது தந்தையின் வார்த்தையை காப்பாற்றவேண்டியதே யென்று தந்தையே நீர் என்னை யெமனுக்கு கொடுத்துவிட்டீர்கள் ஆனல் உங்கள் வார்த்தையை நான் காப்பாற்றுவேன் யென்றான்.

அந்த வார்த்தையைக்கேட்ட உத்தாலகர் விசனமுற்றான் நான் தெரியாமல் சொன்னது யெனக்கே தீங்கு நினைத்துக் கொண்டேன் யென்று விசனமுற்றார்.

மகன் சொல்கிறான் முன்னுளில் சிபிச்சக்ரவர்த்தி புராவைக் காப்பாற்றினுர் ததிசிமகரிஷி தேவர்களின்பொருட்டு தன் முதுகெலும்புக்காக சரீரத்தைக்கொடுத்தார் ராமரை விஸ்வாமித்திரனுக்கு கொடுத்தார் இவர்கள் சத்தியத்தை காப்பாற்றினுர்கள் நீறும் அந்தப்படி சத்தியத்தை காப்பாற்று மென்றான் சரியென்று ஒத்துக்கொண்டார் உத்திரவும் தந்துவிட்டார் தகப்பனை நமஸ்கரித்துவிட்டு நானே யெமலோகம் போகிறேனென்று தன் சித்தின் வலியால் யெமலோகம் சென்றான்.

அவ்விடம் யெமன் மூன்றுநாள் வெளியில் இருக்கட்டுமென்று உத்திரவிட்டார் இவிடம் வாசலில் நிறுத்திவிட்டார்கள் மூன்றுநாள் ஆனதும் யெமனிடம் கூட்டிபோனுர்கள் நசிகேதா நீ இவிடம் யேன் வந்தாயென்று கேட்க தகப்பன் தங்களுக்கு தானம் செய்துவிட்டார் அந்த வார்த்தையை காப்பாற்ற இவிடம் வந்தேனென்றான்.

நசிகேதா யெந்த ஜீவர்களையும் கால முடிவில்லாமல் நாம் இவிடம் அனுமதிக்கமாட்டோம் உன்னுடைய ஆயுள் இன்னும் முடியவில்லை நீ வந்தவழி உன் வீட்டுக்கு போகக்கடவது யென்றான் அதற்கு நசிகேதா ஒன்றும் பேசாமலிருந்தான் யெமன் இவனைப்பார்த்து நசிகேதா நீ இவிடம் வந்ததற்கு உனக்கு மூன்று வரம் தருவேன் அதை பெற்றுக்கொண்டு போய்விடு யென்றான் அந்தப்படி சரியென்று மூன்று வரம் கேட்கின்றான்.

என் பிதா முன்போல யென்மீது பிரியமாயிருக்க 1
அக்கினியின் ஞானரூபம் 2
ஆன்மாவின் ஞானம் 3

இந்த மூன்றும் கொடுங்களென்றான் யெமன் சொல்கிறான் உன் தகப்பன் உன்பேரில் அதிகப்பிரியம்தானே அதை யேன் வரமாக கேட்கின்றாய் யென்றான் சுவாமி யெமலோகம் சென்றவர் பூலோகம் வருவதில்லை நான் போனால் பிசாசுவென்று யேற்றுக்கொள்ளாவிட்டால் யென்னசெய்வது சரி அந்த வரத்தை தந்தேன் அக்கினியின் வரமும் தந்தேன் இதற்கு பிரம்மலோக பிராப்தியுண்டு அதைத்தந்தேன் இனி மூன்றாவது ஆத்மஞான வரம் தரமுடியாது நீ சிறுவன் உனக்கு பிடிபடாது யென்றான்.

அதற்கு வேராக பூலோகத்திலிருக்கும் விசயசுகமனைத்தும் உனக்கு கொடுக்கிறேன் இதைமாத்திரம் கேட்கக்கூடாது யென்றான் சரி விசயசுகமானது இன்று யிருந்து நாளை யழிந்துபோவது ஆத்மஞானமோ யென்றும் அழியாது அதைத்தான் யான் அபேக்ஷிக்கிறேன் மற்றது யெனக்கு வேண்டியதில்லை யென்றான்.

அந்தப்படியே ஆத்மஞானத்தை யுபதேசம் செய்தார் அதை யடைந்து பூலோகம் வந்து தன் தகப்பனை நமஸ்கரித்து எமலோகம் போனதும் எமனிடம் வரம் வாங்கியதும் தெரியப்படுத்தினான் தகப்பன் ஆனந்த பரவசனாய் இருவரும் ஜீவன் முத்தனாய் இருந்தார்கள்.

(நசிகேது கதை முற்றிற்று)

# சுவேதகேது கதை.

சுவேதகேதுவென்று ஒரு ரிஷி குமாரன் அவனை தாய் தந்தையர்கள் பிரியமாய் வளர்த்தார்கள். அதனால் துஷ்டப் பிள்ளையானான் பன்னிரண்டு வயதானதும் உபநயனம் செய்யவில்லை விளையாட்டின் மிகுதியால் ஒருதபா உண்பான் ஒருவேளை யுண்ண மாட்டான் கண்டபடி திரிவான் துஷ்டதனத்தை அதிகமாய் செய்து கொண்டு வந்தான் தாய்தந்தையர் வார்த்தை கேழ்ப்பதில்லை

தகப்பன் ஆலோசிக்கிறான் முன் நான் அதிகப்பிரியமாய் வளர்த்ததினால்தான் இந்த வயதில் துஷ்டனாய்விட்டான் மைந்தன் சீடன் மனைவி இவர்களை அதிகப்பிரியமாய் வைத்திருந்தால் பின்னால் நமக்கு விரோதிகளாவார்களென்று சாஸ்திரமும் சொல்லுகிறது மகன் சொன்னவார்த்தை கேட்பதில்லை மூன்று வருஷம் வரை பெற்ற தாய் சிக்ஷிக்கவேண்டும் எட்டு வருஷம் வரை தந்தை பதினொரு வருஷம் வரை உபாத்தியாயர் தண்டிக்கவேணும் அதற்குபின் சிக்ஷையினின்று விலகுவன் மறுபடி தண்டிக்க யோக்யமில்லை வாயினால் தண்டிக்கலாம் இது சாஸ்திரம் சொல்கிறது.

நம்முடைய மைந்தனை நான் முன் அந்தப்படி செய்யவில்லை மகன் கெட்டுப்போனான் என்னால் இவனுக்கு வித்தை பிடிக்காது யென்று சுவேதகேதுவை அழைத்து நீ வேறு தேசம் சென்று வித்தை கற்று வருவாயென்று அனுப்பிக்கொடுத்தான்.

அந்தப்படி மறுதேசம் போய் வித்தைகளை மூன்று வருஷம் கற்று மறுபடி தகப்பனிடம் வந்து தன் தந்தையை வணங்காமல் உயரமான ஆசனத்திலிருந்தான் தந்தை கோபங்கொள்ளாமல் மகனே யெந்த அதிசயத்தினால் வணக்கமற்றவனாய்விட்டாய் சொல்லுமென்றான் ஆறு சாஸ்திரம் நான்கு வேதங்கள் கற்றதினால் வணக்கமற்றாயா இது பெரிதல்ல நீ ஆத்ம ஞானம் தெரிந்தாயா வென்றான். தவிர

யெதைக்கேட்டால் முழுதும் கேட்டதாமோ
யெதை நினைத்தால் முழுதும் நினைத்ததாமோ
யெதை யறிந்தால் முழுதுமறிந்ததாமோ

இதை உங்கள் குருவிடம் தெரிந்தாயா வென்றான் சுவேதகேது இதையறியாததினால் கற்வமற்று தந்தையே யெந்த வஸ்துவை சிரவணம் செய்தால் விவேகமுண்டாமோ அதையுபதேசியுமென்று சொல்ல.

கேளாய் மகனே இந்த உலகத்தில் இருக்கும் வஸ்துக்களை மூன்று ரூபமாய் நிச்சயித்துக்கொண்டு மூன்றுவது ரூபத்தையரியும் பிரகாசமாகிய அறிவை பிரம்மாவென்று நிச்சயித்துக்கொள் தூல சூக்ஷம தேகம் காரணதேகம் இந்த மூன்று தேகத்தையும் பார்த்துக்கொண்டு சாக்ஷிமாத்திரமாக யிருக்கும் வஸ்து யெதுவோ அதுதான் ஆன்மா மூன்று சரீரமும் ஜடம் இதை நீக்கி பரமான்மாவை யறியவேண்டும்.

பொன்னினால் பலவித ஆபரணம் செய்வதுபோல பரமான்மாவாகிய பிரம்மத்தினிடமிருந்து மனம் தோன்றி மாயையால் ஜகத்துண்டாயிருக்கிறது சர்வமும் மாயா தோற்றமே மாயையும் பிரம்ம தோற்றமே ஆன்மாவன்னியில் ஜகமில்லை நானும் நீயும் அந்தவான்மாவே சகலமும் நாமேயென்று மௌனமாய் மனதை பிரம்ம பாவனையாகக்கொள்வதையே பிரம்ம சாதனமென்பார்கள் ஆன்ம ஞானமடைவதற்கு இரண்டுவித சாதனம் உத்தம அதிகாரிகாரிகள் மகாவாக்ய உபதேசத்தினாலேயே மோக்ஷமடைவார்கள் மத்திம கனிஷ்ட அதிகாரிகள் மேலே சொல்லப்பட்ட பத்துவித முத்திரைகளினால் மனதை சாந்தப்படுத்தி ஆன்மஞானமடைகிறார்கள். ஆனதினால்தான் விசாரத்தினாலும் ஆத்மஞானமடையலாம் யோகத்தினாலும் ஆன்ம ஞானமடையலாமென்று மேலான நூல்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன அவரவர் பிராப்தப்படி வந்தமையும் மகனே இதை தெரிந்து நீயும் மோக்ஷமடைவாயென்று சொல்லி முடித்தார்.

(சுவேதகேது கதை முற்றிற்று)

# நாரதர் ஞானம்



ஒரு காலத்தில் நாரதர் ஜனத் குமாரரிடம்போய் யெனக்கு ஆத்ம ஞானம் உபதேசிக்கவேணுமென்பதாகக் கேட்டார். அவர் நாரதரே இதுவரை நீங்கள் தெரிந்துக்கொண்டதை சொல்லுங்கள் பிறகு நான் சொல்லுகிறேன் யென்று சொன்னார்.

நாரதர் சொல்லுகிறார். நான்கு வேதம் அதாவது ருக் வேதம் யஜுர்வேதம் அதர்வண வேதம் சாமவேதம் அதன் வுபவேதம் நான்கும் ஆயுள்வேதம் தனுர்வேதம் காந்தர்வவேதம் அர்தவேதம் பரத சாஸ்திரம் நீதி சாஸ்திரம் இது முதலானதும் பதினெட்டு புராணம் அதாவது(1)பிரம்ம புராணம் (2) பத்மபுராணம்(3)வைஷ்ணவ புராணம் (4) சைவ புராணம் (5) பாகவதம் (6) நாரதீதம் (7) மார்க்கண்டேயம் (8) ஆக்கினேயம் (9) பவிஷியத்புராணம் (10) பிரம்மவாதபுராணம் (11) வைங்கம் (12) வராகபுராணம் (13) ஸ்காந்தபுராணம் (14) வாமனம் (15) கூர்மபுராணம் (16) மாஸ்தபம் (17) கருடபுராணம் (18) பிரமாண்டபுராணம் ஆக பதினெட்டும் தெரிந்திருக்கிறேன் கதைகள் சொல்வதெல்லாம் இதிகாசமென்றும் ஜகத்துற்பத்தி முதலானது சொல்வது புராணமென்றும் சொல்லுவார்கள் வியாகரணத்தில் சிராரத்வம் முதலானதுகள் சொல்லும் பித்திரி யென்னும் நூலில் நீதி சாஸ்திரம் சொல்லும் தனுர்வேதமென்பது வில்வித்தை காந்தர்வமென்பது பரதநாட்டியம் சங்கீதம் இதுகளெல்லாம் நன்றாய் தெரியும் இவ்வளவும் தெரிந்து வேத அந்தமாகிய பிரம்மவித்தையை நான் அரியவில்லை இந்த வேத பாடத்தில் சாமானியமாக வாசா ஞானம் தெரிந்தேனேயல்லாமல் அத்துவிதிய ஆன்மாவை யடையவில்லை கேவல பாடத்தை யுணர்ந்தேன் அதன் பொருள் உணரவில்லை என் பேரில் கிருபைவைத்து ஆத்ம ஞானம் ஊட்டவேணுமென்றான் நாரதர் சொன்ன வார்த்தையைக்கேட்டு ஜனத் குமாரர் சொல்கிறார் நீங்கள் கூறிய சாஸ்திரங்களெல்லாம் சப்த ரூபங்கள் உலகிலுள்ள பொருள்களை நாம ரூபமாய் கூறும் அப்படி கூறாவிட்டால் யாவருமரியமுடியாது இந்த நாமம் சர்வ வஸ்துரூபம் சர்வ வஸ்துக்களையும்

பிரம்ம ரூபமாகவே தியானம்செய் அந்தப்படி சகலத்தையும் பிரம்ம பாவம் செய்தால் அந்த பிரம்மமாகவே நீயாவாய் யென்று சொல்லி இதை தெரிந்து மோக்ஷத்தை யடைவாயென்று நாரதருக்கு ஜனத் குமாரர் உபதேசித்தார்.

(நாரதர் ஞானம் முற்றிற்று)

## ஜனத்குமாரன் கதை,

ஒரு காலத்தில் காசி க்ஷேத்திரத்தில் சர்வமுனிகளும் ஒன்று கூடினுர்கள் இவர்களெல்லாம் ஜபதபங்கள் முடித்து கங்கை கரையில் ஜபதபங்கள் செய்துக்கொண்டிருந்தார்கள்.

இப்படியிருக்க அவ்விடம் மகாதேவனும், பவானியும் இந்த ரிஷி கூட்டங்களிருக்குமிடம் வந்தார்கள் ரிஷிகளெல்லாம் எழுந்து நமஸ் கரித்தார்கள் ரிஷிகளுக்கு ஆசீர்வாதம் செய்து அவரவர் கேட்டவரம் தந்தார் பெற்றுக்கொண்டார்கள்.

இந்த ரிஷி கூட்டத்தில் ஜனத் குமாரனும் இருந்தார் அவர் மகா தேவர் வந்ததற்கு எழுந்திருக்கவில்லை அவர் கண்ணை மூடிக்கொண்டு தவஞ்செய்துக்கொண்டிருக்கிறுர் மகாதேவரும் பவானியும் திரும்பி பார்க்கையில் இவர் மாத்திரம் எழுந்து வராமல் கண்ணை மூடியிருப் பதை தெரிந்து மகாதேவர் ஒன்றும் பேசாமல் சும்மாவிருக்கையில் பவானிதேவி ஜனத்குமாரன்பேரில் கோபமுற்று இவன் பிரம்மாச் சாரியானதால் கர்வமுற்று மகாதேவரைக்கண்டும் நமஸ்காரம் செய்ய வில்லை இவனுக்கு சாபமிடுவேனென்று சாபமிட்டாள்.

இரண்டாவது ஜன்மம் அஸ்வகுல ஜாதியார் வயிற்றில் ஆண் மகவாய் பிறந்து பூர்வக்கியானியாயிருப்பானென்று சாபம். மகா தேவர் தடுக்கவுந் நிறுத்தவில்லை. அந்தப்படியே மறு ஜன்மம் எடுத்து அஸ்வங்களை வளர்த்திக்கொண்டுவந்தான் ஞானவுணர்ச்சியுடனிருந் தான்.

மறுபடி மகாதேவனும் மகாதேவியும் அசுவ லாயத்திலிருக்கும் ஜனத்குமாரனிடம்போய் முன் ஜன்மத்தில் யெங்களை மதியாமலிருந்ததினால் கீழான ஜன்மம் வரகாரணமாயிற்று இப்பொழுதாவது என்னை வணங்கி வேண்டிய வரத்தை பெற்றுக்கொள் யென்றாள் தேவி

அதற்கு ஜனத்குமாரன் தங்களுடைய கிருபையால் இந்த ஜன்மத்தை கொடுத்தது நல்லதுதான் நான் கேட்பது யென்ன இருக்கிறது சகலமும் நானகவே யிருக்கிறேன் வரங்கொடுப்பவனும் வாங்கிக்கொள்பவனும் நானே இந்த சரீரமும் மலமூத்திரத்துக்கு தூரம் போகவேண்டி யிருக்கிறது மிருகமாயிருந்தாலும் அவ்விடமே யெல்லாம் செய்துக்கொள்ளலாமென்றான். ஆனால் உனக்கு ஒட்டக சரீரம் உண்டாகக்கடவது யென்றாள்.

மறு ஜன்மம் ஒட்டகமாய் பிறந்தது பூர்வக்கியானமிருந்ததினால் அது வேலை செய்வதில்லை காட்டில் ஒட்டிவிட்டார்கள் அது தன்னம் தானகவே திரிந்துக்கொண்டிருந்ததை பார்த்து மகாதேவனும் பவானியும் ஒட்டகமிருக்குமிடம் போனார்கள் ஜனத்குமாரா இன்னமாவது நம்மிடம் வேண்டியவரம் வாங்கிக்கொள்ளென்றாள் அம்மா யிந்த சரீரம் யெனக்கு மேலானதாயிருக்கிறது மலஜலங்கழிக்கவும் தூரம் போகவேண்டியதில்லை நான் கேட்கவேண்டியதொன்றுமில்லையே யென்றான் பவானி ஆனால் எனக்கு நீயாகிலும் ஒருவரம் தருவாயா யென்றாள் தருகிறேனென்றான் ஆனால் யெனக்கு குழந்தையாய் பிறக்கக்கடவதென்றாள் அப்படியே ஆகட்டுமென்றார். பின்னால் கந்தனாக பிறந்தது. சூரசம்மாரம் செய்தான்.

(ஜனத்குமாரன் கதை முற்றிற்று)

# அம்பரீசன் கதை.



அம்பரீசன் யென்று ஒரு அரசன். மகா சத்தியசீலன் அவனுக்கு மகாவிஷ்ணுவே குலதெய்வம் பிரபஞ்சத்தை அனித்யமென்றும் பிரம்மத்தை நித்யமென்றுமிருப்பவர் இவர் நாராயணனைக்கோறி தவஞ்செய்தார். பிரசன்னமாய் உனக்கென்ன வரம் வேணுமென்றார். யெனக்கு யாரும் எதிரி இல்லாத சக்கிராயுதம் கொடுக்கவேணுமென்றார். அந்தப்படியே கொடுத்தேனென்று கொடுத்துவிட்டு போய்விட்டார்.

பிறகு மூன்று லோகமும் திக்விஜயஞ் செய்து வந்தார் பிறகு ஏகாதசி வந்தது விரதமுண்டு ஆயிரம் பிராமணர்களுக்கு தானம் கொடுத்து தான் பாரணை பண்ணுகிற வழக்கம் மாமூல்படி ஏகாதசி முடிந்து மறுநாள் பாரணை பண்ண ஆயிரம் பிராம்மணர்களுக்கு தானம் கொடுத்துவிட்டு பாரணை செய்யும் தருவாயில் தூருவாசமுனி அவ்விடம் வந்துவிட்டார் வந்தவரை யெதிர்கொண்டு அழைத்து பாதபூஜை முதலானது செய்து நமது இல்லத்தில் அதிதியாக போஜனமருந்தல் வேண்டுமென்றார்.

அதற்கு தூருவாசர் இசைந்து நான் நதிக்கரைக்குப்போய் ஸ்நானம் செய்துவருகிறேனென்று புரப்பட்டு சென்று அதிக நாழியாகியும் வரவில்லை அம்பரீசன் துவாதசி போகிறதே யென்று விரத முடிக்கவேண்டி தீர்த்தத்தை உட்கொண்டார்.

இதை தூருவாசர் அறிந்துக்கொண்டு அதிக கோபத்துடன் வந்தார் அம்பரீசா அதிதியிருக்க விரதமெப்படி முடிக்கலாமென்று கோபத்துடன் தன் தலையிரை பிடுங்கி ஒருபூதம் உண்டாக்கினார் அந்த பூதத்தை நோக்கி பூதமே அம்பரீசனைக் கொன்றுவா வென்றார்.

பூதமானது வருகிறது. பார்த்தான் அம்பரீசன் தனக்கு விஷ்ணு கொடுத்த சக்கரத்தை பிரயோகம் செய்துவிட்டார் பூதத்தை கொன்று விட்டு தூருவாசரை துரத்த தூருவாசரும் சிவனிடம் ஓடினார் சிவன்

பிரம்மனிடம் போகச் சொன்னார் பிரம்மனிடம் போக இது விஷ்ணு பக்தனுடைய சக்ரம் விஷ்ணுவிடமே போகவேணுமென்றான். விஷ்ணுவிடம் போனான் அவர் என் பக்தனுடைய சக்ரம் அவனிடமே போனால்தான் நிவர்த்தியாகுமென்றார்.

உடனே திரும்பினான். அம்பரீசனிடமே சென்றான் அவர் காலில் விழுந்து அம்பரீசா உன் மகிமையை அறியாமல் போனேன் என்னை மன்னிக்கவேணுமென்றான் இதோ சக்கரம் வருகிறது அழைத்துக் கொள்ளுங்களென்றான் பயப்படாதே உன்னை காப்பாற்றுவேனென்று சக்கரத்தை கையிலே பிடித்து நிறுத்திக்கொண்டார் தூருவாசரை தங்களுடைய வீட்டிலேயே பாரணை செய்து இருவரும் திருப்திடான பிறகு தூருவாசர் விடைபெற்று சத்யலோகம் போய்விட்டார்.

(அம்பரீசன் கதை முற்றிற்று)

## சிவலிங்கமுண்டான கதை.

மேருமலை சாரலில் ரிஷி கூட்டங்கள் ஒன்று சேர்ந்திருந்தார்கள் அந்தக்கூட்டத்தில் பிருகுமுனிதான் மேலானவர். அவர் சொல்கிறார் ஒரு யாகம் செய்யவேண்டியிருக்கிறது உங்களுக்கெல்லாம் சம்மதமாவென்று ரிஷி கூட்டங்களை பிருகுமுனி கேட்டார்.

அதற்கு ரிஷி கூட்டங்கள் யாகம் செய்வதற்கு சம்மதியே அந்த யாகத்துக்கு கர்த்தாவாய் யாரை நியமிப்பதென்று ஒருவர் சொன்னார் ஆம் — கர்த்தாவாய் யிருப்பவர் சகலமும் தெரிந்தவராக யிருக்க வேண்டும். யெதற்கும் கைலாசம்போய் சிவனிடம் தெரிந்து வரலாமென்று பிருகு சொன்னார்.

மற்ற ரிஷிகளும் சம்மதப்பட்டு கைலயங்கிரி போனார்கள். நந்தியைக்கண்டு நாங்கள் சிவபெருமானிடம் ஒரு காரியமாக வந்திருக்கிறோம் அவரிடம் அனுமதி பெற்றுவாவென்று சொல்ல அந்தப்

படியே நந்தி சிவனிடம் போய் பார்த்துவிட்டு திரும்பிவந்து ரிஷிகளே இந்த சமயத்தில் அவரிடம் போகமுடியாது யென்றான்.

ரிஷி கூட்டங்கள் மறுபடி கொஞ்சநேரம் பொருத்து நந்தியை போய்வாருமென்று சொன்னார்கள் நந்தி நான் இனி போகமுடியா தென்றான் ஏழுநாள் கார்த்திருந்தார்கள் சிவன் வரவில்லை நந்தியும் போகமுடியாதென்றான்.

பிருகு முனிக்கு கோபமுண்டாய்விட்டது ஞானதிருஷ்டியால் பார்த்தான் பரமசிவன் காமாந்தகனாய் ஈஸ்வரியுடன் இருப்பதைப் பார்த்து நாம் ஏழுநாள் கார்த்திருப்பதை யுணராமல் அலக்ஷியமாய் யெண்ணி காமத்தில் அழுந்திக்கிடக்கிறான் என்ன மடத்தனம் அஞ் ஞானிகள் போல நடப்பது நியாயமா சிவனுக்கு இந்த காமத்துக்கு ஆதாரமாயிருக்கின்ற லிங்கமும் யோனியும் அற்றுவிழக்கடவதென்று பிருகுமுனி சாபம் தந்தார். உடனே இருவருடைய குறியும் அற்று விழுந்தது. இதைக்கண்ட சிவன் ஞானதிருஷ்டியில் தெரிந்து இந்த லிங் கத்தை ஆவுடையார் லிங்கமாக செய்துவைத்துவிட்டு ரிஷிகளை வந்து பார்த்தார் பிருகுமுனி ரிஷி கூட்டங்களுடன் போகிறதை பார்த்தார் கணங்களை யனுப்பி அவர்களை யழைத்துவரச் சொல்லி இவர்களை சந்தோஷப்படுத்த பிருகுமுனியை கட்டி ஆலிங்கனம் பண்ணப்போனார் சிவனே நீர் காமாந்தகனாய் ஆசூயையாய் இருந்து விட்டு யென்னை யாலிங்கனம் செய்ய வருகிறீர், உங்களுக்கு யெப் பொழுதும் அசூசியான தொழிலே, மயானத்தில் வாசஞ்செய்யும் பைசாசம் முதலான அசூசியருடன் வாசம் செய்பவர் ஆனதினால் யென்னை யாலிங்கனம் செய்யாதீர்கள் தூர நில்லுமென்றார். இதைக் கேட்ட சிவபெருமானுக்கு கோபம் வந்துவிட்டது நெற்றிக்கண்ணை திறந்தார்.

அதைக்கண்டு பிருகுவானவர் தன்பெருவிரலக்கினியால் சிவ னுடைய நெற்றிக்கண் அக்கினியை தடுத்தார். சிவனே நீ பிராமண தெய்வமாகாமல் உனக்கு பூஜை முதலிய நைவேத்தியங்கள் பிராம்ம ணர்களுக்கு உதவாமல் போகக்கடவதென்று சாபமிட்டார்.

மறுபடி இந்த ரிஷி கூட்டங்கள் சத்தியலோகம் போனார்கள் பிரம்மனை கண்டு சும்மா நின்றார்கள் பிரம்மனை நமஸ்கரிக்கவில்லை பிரர்மன் நீங்கள் வணக்கமற்று விருக்ஷத்தைப்போல நிற்பது யென்ன காரணமென்றான்.

பிரம்மதேவரே நாங்கள் ஒரு காரியத்துக்காக உங்களிடம் வந்தோம் ஆனால் உங்கள் கோபத்தினால் யெங்களை மரமென்று சொல்லிவிட்டீர்கள் ஆனதினால் உமக்கு ஒரு சாபமிடுகிறேனென்று உனக்கு பூலோகத்தில் ஆலயமில்லாமல் போகக்கடவதென்று சாபமிட்டு வைகுண்டத்திற்கு மகாவிஷ்ணுவிடம் சென்றார்கள்.

இவர் வருவதைத் தெரிந்து விஷ்ணு சயனத்தில் லக்ஷிமியுடன் சயனித்துக்கொண்டிருந்தான் ரிஷிகள் கோபாவேஷமாகத்தான் போகிறார்கள் துவாரபாலகரும் பேசாமல் வழி விட்டுவிட்டார்கள் யாரும் தடை செய்யவில்லை உள்ளே பார்த்தால் லக்ஷிமியுடன் சயனித்திருந்த திருமாலை காலினால் உதைத்தார் பிருகு முனியானவர்.

விஷ்ணு திரும்பி யெழுந்து சுவாமிகளே மன்னியுங்கள் நான் தங்கள் வரவை பார்க்கவில்லை மன்னித்துக்கொள்ளுங்களென்றார் ரிஷிகளுக்கு கோபம் தணிந்து மகாவிஷ்ணுவே நீரே மகான் நீரே சாந்தபுருடன் நீரே காமகுரோராதி குணங்களை வென்றவர் எங்களை மன்னியுங்கள் நாங்கள் செய்தது நியாயமல்ல எங்கள் குற்றத்தை மன்னியுமென்று சொல்லி,

தாங்கள் வந்த வரலாற்றை சொன்னார்கள் சரி யாகத்துக்கு கர்த்தா நீரே யிருந்து முடித்து தரவேண்டுமென்றார் அந்தப்படியே செய்து முடிக்கலாமென்று விஷ்ணு அந்த ரிஷி கூட்டங்களுடன் சென்று யாகத்தை முடித்து மகாவிஷ்ணு தங்களிருப்பிடம் வந்து சேர்ந்தார்.

(சிவலிங்கமுண்டான கதை முற்றிற்று)

---

# விதியை மதியினால் வென்ற கதை.

சௌனகாதி ரிஷி வனத்தில் சர்ஜன யோகி யென்றொருவர் பத்தினியுடன் காட்டில் வாசஞ் செய்துக்கொண்டிருந்தார் அவருக்கு மாணாக்கன் ஒருவனுண்டு சர்ஜன யோகி பத்தினிக்கு கெற்பமுண்டாயிற்று. தன் சிஷ்யனிடம் நான் யாத்திரை செய்து வருகிறேன் நான் வரும்வரை ஆசிரமத்தை பார்த்துக்கொள் சீக்கிரம் வந்துவிடுகிறேனென்று சொல்லிவிட்டு புறப்பட்டு விட்டார்

இந்த மாணாக்கன் அவ்விடமே இருந்து குருபத்தினிக்கு ஆகாராதிகள் கொண்டுவந்து கொடுத்து காப்பாற்றிக்கொண்டு வருகிறான் குருபத்தினிக்கு கெற்பம் பத்துமாதமாய்விட்டது பிரசவ வேதனையுண்டாயிற்று பக்கத்து பட்டணத்தில் மருத்துவச்சியை அழைத்து வந்துவிட்டு தான் தூரமாய் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தான்.

யாரோ ஒரு பிராமணனைப்போல இவன் கண்ணுக்கு தென்பட்டு பிரசவ வீட்டுக்குள் நுழையப்போனான் இவன் யார் போவதில் அவிடமென்னவேலை நீயார் அவ்விடம் போக உன்னை யார் அழைத்தார் யென்று அதட்டி பேசினான் பிராமணன் அப்பா நான் உன் கண்ணுக்கு தெரிந்துவிட்டேன் நீ வுத்தமன் தவமகிமையால் யென்னை காணலாயிற்று நான் பிரமதேவன் பிறக்கும் குழந்தைக்கு அதன் விதியை நிர்ணயிக்கப்போகிறேன் யென்றான் ஆனால் அதைச் சொல்லுமென்றான் இப்பொழுது தெரியாது அவிடம்போய் பார்த்த பிறகுதான் தெரியுமென்றான் ஆனால் அப்படியே பின்னால் வந்து சொல்லவேண்டுமென்றான் சொல்வதை நீ வெளியில் யாருக்கும் சொல்லக்கூடாது யென்றான் அப்படியே நான் யாருக்கும் சொல்வதில்லையென்றான் சரியென்று சொல்லிவிட்டு வுள்ளே போனதும் குழந்தை பிறந்து கத்திக்கொண்டிருந்தது பிரம்மன் வெளியில் வந்தான் சிஷ்யன் குழந்தையின் விருத்தாந்தம் சொல்லுமென்றான் அப்பா பிறந்தது பெண் குழந்தை இதன் அதிஷ்டமோ ரம்பவும் கெடுதலானது தாய் தந்தை யிழந்து வேசியாய் அதனாலே தான் ஜீவனம் யென்று சொல்லிவிட்டு போய்விட்டார்.

மறுபடி சில நாளில் தன் குருவும் வீடுவந்து சேர்ந்தார் மருபடி ஒரு வருஷமிருந்தார் மறுபடி பெண்சாதி கெற்பமானாள் மருபடியும் சிஷ்யனிடம் சொல்லிவிட்டு யாத்திரை போய்விட்டார் மருபடி பிரசவகாலம் வந்து மருத்துவச்சி வந்ததும் இந்த பிரம்மனும் வந்தான் பிராமணரே தெரியுமல்லவா முன்போலவே சங்கதி தெரியப்படுத்த வேண்டுமென்றான் சரியென்று உள்ளே போனார் குழந்தை பிறந்தது அதன் விதியை தலையில் யெழுதிவிட்டு வெளியில் வந்து அப்பா குழந்தை ஆண் இவனுடைய கதியோ ஒரு யெருமை ஒரு மூட்டை நெல் இதுதான் இவனுக்கு ஆஸ்தி யென்றான் அப்படியா போய் வாருமென்று அனுப்பிக்கொடுத்துவிட்டான்.

மருபடி சிலநாளில் தன் குரு வந்துவிட்டார் ஆண் குழந்தை பிறந்ததினால் கொஞ்சம் சந்தோஷத்துடனிருந்தார் சிலகாலத்தில் குருவும் குருபத்தினியும் இறந்துவிட்டார்கள் குழந்தைகள் 6, 8, வயதுடையவர்கள் இவர்களை சிஷ்யன் கூட்டிக்கொண்டு பட்டணத்துக்கு சென்றான் இராத்திரி சத்திரத்தில் படுத்து தூங்கினார்கள் இந்த குருமாணக்கன் இரண்டு பாலர்களை விட்டு தான் வேறு ஊருக்கு போய் விட்டான்.

இந்த இரண்டு பிள்ளைகள் தன் துணைவனை காணாது அழுது கொண்டிருந்தார்கள். ஊரிலுள்ளவர்கள் வேடிக்கை பார்த்தார்கள் அவ்விடமுள்ள ஒரு எருமைக்காரன் இந்த ஆண் பையனை நான் எடுத்து வளர்த்திக்கொள்வேனென்றான் சரியென்று அவ்விடமுள்ள ஜனங்கள் அவனுக்கு பிள்ளையே இல்லாததினால் அவன் கொண்டு போகட்டுமென்று அவனுக்கே ஆண் பிள்ளையை கொடுத்துவிட்டார்கள்.

பெண்பிள்ளை யாரும் வேண்டவில்லை ஒரு ஏழை தாசி எனக்கு கொடுங்கள் நான் வளர்த்துக்கொள்கிறேனென்றாள் கொடுத்துவிட்டார்கள்.

இவனுக்கு வயது வந்ததும் எருமைக்காரன் இறந்துவிட்டான். இந்தப் பையன் தன் வளர்ப்புத் தந்தை செய்தொழில்தான் செய்து

கொண்டு வருகிறான். அதாவது ஒரு கறவை எருமை அதை வளர்த்து பாலை விற்றுவருவது வாரம் ஒரு மூட்டை நெல் வாங்கிக்கொள்வது இதுதான் இவனுக்கு ஆஸ்தி இந்தப்படியிருக்க.

முன் இந்த குழந்தைகளை விட்டுப்போன அதே சந்நியாசி அவ்விடம் வந்தான் தான் முன்விட்டுப்போன குழந்தைகள் யென்னமாயிருக்கிறதென்று அவிடம் ஊரிலுள்ளவர்களை விசாரித்து எருமைக்காரனை கண்டுபிடித்து அவனிடம் சென்று உன் தகப்பன் இருக்கிறானா வென்றான் சுவாமி தகப்பனில்லை நான் ஒருவன்தான் யெனக்கு ஒரு எருமை இருக்கிறது அதைக்கொண்டு ஒருமூட்டை நெல் வாங்கிப்போட்டுக்கொண்டு ஜீவனம் செய்கிறேனென்றான்.

இவன்தான் நம்ம குருமகனென்று தெரிந்துக்கொண்டு உன்னை பெற்ற தகப்பனா வளர்த்தின தகப்பனா யென்றான் நான் சாமியாரையனும் எருமைக்காரன் வளர்த்தினும் யென்னை தெரியுமாவென்றான் தெரியவில்லையே யென்றான் நான் உங்கள் தகப்பன் சிஷ்யன் உன் தாய் தந்தையர்கள் இருவரும் இறந்துவிட்டார்கள் நான் உங்களிருவரையும் அழைத்துவந்து சத்திரத்தில்விட்டு தூங்கும்போது நான் போய்விட்டேன் என்றான்.

ஆமாம் யெனக்கு இப்பொழுது கவனத்துக்கு வருகிறதென்றான் நான் சொன்னபடி நீ கேழ்ப்பாயானல் உனக்கு அதிகமாய் பணம் உண்டாக்கி தருகிறேன் யென்றான் சொல்லுங்கள் அந்தப்படியே செய்கிறேனென்றான்

உன்னிடம் இருக்கிற எருமையும் ஒருமூட்டை நெல்லையும் விற்று பரதேசிகளுக்கு அன்னதானம் செய்துவிடுவென்றான் அந்தப்படியே செய்தான் சாயந்திரம் நாளை யென்னசெய்வதென்று வியாகூலத்துடன் படுத்திருந்தான் பிரம்மன் தலைவிதியை எழுதியவனுக்கு தெரிந்துவிட்டது சரி நாம் அவனுக்கு விதியை சொன்னதினல் இந்த சமயம் நமக்கு வேலை வைத்துவிட்டானென்று ஒரு எருமையும் நெல் மூட்டை ஒன்றும் முன்போலவே அவன் வீட்டில் இருக்கச்செய்தான் மறுநாள் பார்த்தான் எருமைக்காரன் முன்போலவே இருந்தது. சிஷ்

யன் பார்த்தையாவென்று சொல்லி இதுகளையும் விற்று பரங்களுக்கு அன்னதானம் செய்டென்ருன் அந்தப்படியே செய்தான் இந்தப்படி ஆறுமாதம் செய்தான் பிரம்மனுக்கு சலித்து எருமைக்காரனிடம் விதியை திருப்பி எழுதி அதிக செல்வமுடையவனுக்கினுன் விவாகம் செய்துக்கொண்டு பணக்காரனுனன் சந்நியாசி எருமைக்காரனைப் பார்த்து உன் சகோதரி எவ்விடமிருப்பதென்ருன் தாசி வீட்டில் என்ருன் அவ்விடம் சென்று தன்னை யறிவித்து நான் சொன்னபடி கேட்டால் உனக்கு பணமதிகமாக சேர்ந்து பணக்காரியாக்குகிறேனென்ருன் சரியென்ருள்.

நீ தினம் ஒருவனைச்சேர்ந்து அதனுல் ஜீவனமல்லவா: இன்று நீ யார் வந்து கதவை தட்டினுலும் ஆயிரம் வராகன் கொடுத்தால்தான் கதவை திறக்கமுடியுமென்று சொல்லிவிடு, ஆயிரம் வராகன் உனக்கு கிடைக்குமென்று சந்நியாசி சொன்னுன்.

அந்தப்படியே இராத்திரி கதவை தட்டினுர்கள் ஆயிரம் வராகனுண்டா வென்ருள் வந்தவர்கள் திரும்பி நடந்தார்கள் விடியற்காலமுமாய்விட்டது பிரம்மன் தலையெழுத்து சரிவரவேணுமே; பிரம்மதேவனே ஆயிரம் வராகன் கொண்டுவந்து கொடுத்து இருந்து போனுர்.

விடிந்ததும் சந்நியாசி தாசியை இந்தப் பணத்தைப் பூராவும் அன்னதானம் செய்துவிடுமென்ருன் அப்படியே செய்தாள் தினம் இப்படியே நடந்தது அன்னதானப்பலன் புண்ணியமிகுதியால் இவளுக்கு நற்கதி வந்துவிட்டது. பிரம்மன் விதியை திருப்பி எழுதியதினுல் சன்யாசி உனக்கு ஒரு புருஷனை விவாகம் செய்து கொண்டு பெரியமாடிவீடு கட்டிக்கொண்டு சுகமாய் வாழுமென்று சொல்லி அந்தப்படியே செய்து வைத்துவிட்டு சந்நியாசி போய்விட்டார்.

(விதியை மதியினுல் வென்ற கதை முற்றிற்று)

# நல்லமந்திரி கதை.

ஒரு பட்டணத்தில் மதுரேசன் என்னும் ஒரு அரசன். அவனுக்கு நல்லமந்திரி யென்று ஒருவன் மந்திரியாக இருந்தான் அவன் இராத்திரி காலத்தில் நகர் சோதனைக்கு போகிறதுண்டு ஒருநாள் நடு ராத்திரியில் ஊருக்கு சற்று வெளியில் காளி கோவிலுக்கு பக்கத்தில் போனவுடன் அழுகுரல் சப்தம் கேட்டது மறுபடி கோவில் பக்கத்தில் போனான் அவ்விடம் ஒரு சப்தம் இராஜாவுக்கு அரண்மனையில் ஆபத்து யென்று சப்தம் உண்டாயிற்று.

மந்திரி வுடனே புறப்பட்டு அரண்மனைபோய் ராஜாவும் ராணியும் தூங்குவதைப் பார்த்தான் மேல் மாடியிலிருந்து கீழே ஒரு சர்ப்பம் இறங்கி வருவதைக்கண்டான் இதுதான் காரணமென்று உள்ளே நுழைந்து கத்தியினால் அந்தப் பாம்பை இரண்டு துண்டாக்கினான் அதனால் பாம்பின் விஷம் ராஜாத்தியின் ஸ்தனத்தின்மேல் விழுந்து விட்டது அதை யெடுத்துவிட்டால் விஷமேறுமென்று தன் நகத்தினால் சுரண்டியெடுத்து நகத்தையறுத்து அந்தப் பாம்பையும் நகத்தையும் துணியில் சுத்தி ஜன்னல் வழியாக யெறிந்துவிட்டு வெளியில் போகும் சமயத்தில் ராஜாத்திக்கு தெரிந்து மந்திரி போவதை பார்த்தாள் அரசனை எழுப்பி மந்திரி ஒரு வேலை செய்துவிட்டு போகிறான் யென்ன வென்று கேழ்க்க அரசன் என் ஸ்தனத்தைக் கீரிவிட்டு போகிறானென்றாள்.

அரசனுக்கு கோபமுண்டுபண்ணியது. வேறு மந்திரியை அழைத்து இது சங்கதி இவ்விடம் நடந்ததை சொல்ல, நான் இவ்விடம் அவரை கூப்பிட்டு விசாரிக்கிறேன் இங்கு நீங்கள் முன்போல தூங்குவதுபோல இருங்களென்றான்.

அந்த மந்திரியை கூப்பிட்டு விசாரிக்கிறார். இவ்விடம் நடந்த தென்ன விசேஷம் சொல்லுங்களென்றான், மந்திரியைப் பார்த்து நான் நகர் சோதனைக்குப் போனேன் காளி கோவிலில் அரசனுக்கு அபாய மென்ற சப்தம் கேட்டு இவ்விடம் அரண்மணையில் வந்துபார்க்க ஒரு

சர்ப்பம் மேலிருந்து அரசனிடம் வருவதைக்கண்டு அதைத் துண்டித்தேன் அதன் விஷம் ஸ்தனத்தின்மேல் விழ அதை நகத்தால் கீறியெறிந்து நகத்தையும் துண்டித்து பாம்பையும் நகத்தையும் துணியில் சுத்தி ஜன்னலில் எறிந்தேனென்றான் அதை யெடுத்து பார்த்தார்கள் ராஜாவும் பெண்சாதியும் எழுந்து விசாரித்து மந்திரியை புகழ்ந்தார்கள்.

(நல்லமந்திரி கதை முற்றிற்று)

## ஏழைப்பிராமணன் கதை.



ஒரு பட்டணத்தில் ஒரு ஏழை பிராமணன் அவனுக்கு ஒரே குமாரன் தகப்பன் விருத்தாபியனாய் சாகப்போகிறான் மகன் தகப்பன் சமீபம்போய் யெனக்கு யென்ன சொல்கிறீரென்று கேட்டான்.

தகப்பன் அப்பா யென்னிடம் பணம் காசு ஒன்றும் இல்லை அநேக வேதங்களின் பாடங்களை படித்திருக்கிறேன் அதன் பொருள் இந்த சீட்டில் அடங்கியிருக்கிறது. இதை பெரியோர்களிடத்தில் கொடுத்தால் கேட்டதை கொடுப்பார்களென்று அந்த சீட்டை எடுத்து மகனிடம் கொடுத்தான் அதை மகன் பெற்று பத்திரமாய் வைத்துக் கொண்டான்.

தகப்பன் காலமாய் விட்டான் கருமாதி சடங்குகள் முதலானது முடிந்த பின்னிட்டு தாயார் மகனை பார்த்து அப்பா உன் தகப்பனிருந்த போது ஏதாவது கொண்டுவந்து கொடுப்பார் இனிமேல் நீதான் சம்பாதியம் செய்து வரவேண்டுமென்றாள்.

சரிதான் யென்று தகப்பன் கொடுத்த சீட்டை கையிலெடுத்துக் கொண்டு ஊரிலுள்ள பெரிய மனிதரிடம் கொண்டுபோனான் சீட்டை கொடுத்தான் வாசித்து பார்த்துவிட்டு போடா பயித்தியக்காரா வென்று சொல்லிவிட்டார்கள்.

அரசனிடம் கொண்டுபோய் காட்டினன் சீட்டை. அரசன் அதை படித்தான் அதாவது எத்பாவம்—தத்பவதி என்று சீட்டில் எழுதியிருந்தது இது யார் கொடுத்த சீட்டு யென்ருன் என் தகப்பன் இறக்கும்போது இதை கொடுத்து இதுதான் தான் சம்பாதித்த பொருளென்று எனக்கு தந்த சீட்டு யென்ருன்.

இந்த சீட்டின் கருத்து தெரியுமா எதை விரும்புகிருயோ அது கிடைக்குமென்று இதன் பொருள். ஆனதினுல் உனக்கு யென்ன வேண்டும் தருவேன் யென்று அரசன் சொல்ல பூமியும் திரவியமும் வேண்டுமென்ருன் சரி அப்படியே பிராமண குமாரனுக்கு கொடுத்து விட்டு அந்த சீட்டை வாங்கிக்கொண்டு அரசன் யோசிக்கிருன்.

நாம் இதை பரீக்ஷிக்கவேண்டும் யென்று பிராமணனைப்போல ரூபமாகி இந்த சீட்டை கையில் கொண்டு வேறு தேசத்தரசனிடம் இந்த சீட்டை கொடுத்தான் அதை பார்த்து (எத்பாவி—தத்பவதி) யென்று படித்தார் விரும்பியபடி கிடைக்குமாவென்று அரசன் கேட்டான் அவ்விடமிருந்த அரசன் குமார்த்திகள் நால்வர் தகப்பனிடம் சொல்லுகிருர்கள்.

இந்த பண்டிதரிடம் நாங்கள் வித்தை கற்றுக்கொள்ளவேண்டும் இவரை இவ்விடமே இருக்கச் செய்யுங்களென்ருர்கள் சரியென்று அவரை வாத்தியாராக்கி படித்தார்கள் சிலகாலத்தில் பெண்கள் ருது வாய்விட்டார்கள் படிப்பை நிறுத்தி குருவுக்கு காணிக்கை கொடுக்க வேண்டிய வெகுமதியை கொண்டுபோய் கொடுக்க எத்பாவம் தத்ப வதி யென்ருன் ஆனுல் உங்களுக்கு யென்ன வேண்டும் அதை தரு கிருேமென்ருர்கள், ஆனுல் தருவீர்களா? தருகிருேம். நீங்கள் நால்வரும் யென்னைகூடி சுகம் கொடுக்கவேணுமென்ருன் சம்மதித்து தகப்ப னிடம்போய் நாங்கள் இந்த பிராமணனை விவாகம் செய்துகொள் வதாக சொன்னுர்கள் பிராமணனை அழைத்து சங்கதியை சொல்ல தான் ராஜாவென்றும் இவர்களை விவாகம் செய்துகொள்ளவே இவ்

விடம் வந்ததாகவும் சொன்னார். தன் பட்டணத்துக்கு தெரிவித்து நால்வரையும் விவாகம் செயிதுகொண்டு சுகமாய் வாழ்ந்தார்கள்.

(ஏழை பிராமணன் கதை முற்றிற்று)

## பதி பக்தி



ஒரு ஊரில் குசப்பெண் ஆற்றங்கரைக்கு ஜலமெடுக்க போனாள் அந்த ஊர் அரச குமாரன் இந்த குசப்பெண்ணின்மேல் மோகங்கொண்டு மந்திரி குமாரனை யனுப்பி அரசன் கருத்தை தெரிவித்தான்.

குசப்பெண் மனதுக்கு வருத்தமுண்டாகி யென்னசெய்வது மருத்தாலும் நமக்கு தண்டனை வரும் என் பதிபக்திக்கு பங்கமில்லாமல் செய்யவேண்டுமென்று யோசித்து அரசனை இராத்திரி எட்டு மணிக்கு தன் வீட்டுக்கு வரும்படி சொல்லிவிட்டாள்.

இவள் தன் வீட்டில்போய் புருஷனிடம் இது சங்கதி தெரிவித்து இதை தடுக்க தான் ஒரு யோசனை செய்திருப்பதாக சொன்னாள் சரியென்று புருஷன் சொல்லிவிட்டான் புருஷனை நீ பத்துமணிக்குதன் வீட்டுக்கு வரவேணுமென்று அனுப்பிவிட்டாள்.

இவள் சமையல் செய்கிறாள் ஒருவிதமான வாழைக்காயை பாவக்காய் போலவும் கத்திரிக்காய் போலவும் வெண்டக்காய் போலவும் பல வடிவங்களாக செய்து ஒரேவித மசால் செய்து தின்றாள் ஒரு மாதிரி இருப்பதாக செய்தாள் சர்க்கரையினால் அப்படியே பலவிதமாக வடிவம் செய்தாள் சமையல் தயாராய்விட்டது எட்டுமணியானதும் ராஜா வந்துவிட்டார் பாயில் உட்காரவைத்தாள் இலைபோட்டு காய்கறிகளை படைத்தாள். ராஜா பதார்த்தங்கள் ஒன்றொன்றாக சாப்பிட்டான் யெல்லாம் ருசி ஒரேமாதிரி யிருப்பதைப் பார்த்து பெண்ணே ஒரேமாதிரியான பதார்த்தம் பலவகையாக ஏன் செய்யவேண்டுமென்றான் சுவாமி நான் உங்களிடம் ஒருவார்த்தை ஸ்ரீகளுடைய சுக

மானது இந்த பதார்த்தம்போல வடிவமாத்திரம் வேறு. ருசியானது ஒன்றே. இந்தப்படியே எல்லா ஸ்ரீகளின் சுகமொன்றே அதைவிட்டு என்மீது ஆசைபடுவதில் யென்ன வேறு சுகமென்னிடம் இல்லையே உங்களரமணையில் இல்லாத பெண்களா நான் பதிவிரதை அன்னிய புருஷரை தீண்டுவதில்லை இதை தெரிவிக்கவே நான் உங்களுக்கு இந்த விதமாக தெரியப்படுத்தினேன் நான் உங்களுக்கு சகோதரியைப் போல பாவித்து யென்னை ரக்ஷிக்க வேண்டுமென்றாள் அரசகுமாரன் விவேகியானதால் இந்த பெண்ணினுடைய குணமெனக்கில்லை பாரத் தையா இந்த பெண் விவேகி அம்மா உன்னால் யெனக்கு விவேக முண்டாய்விட்டது நீ விவேகியானதால் உனக்கு இதோ வெகுமதியை பெற்றுக்கொள்ளென்று ரத்தினரத்தை கொடுத்தான் புருஷனும் வந்து விட்டான் அரசன் ஒன்றும் பேசாமல் நடந்தான் குசப்பெண் தன் சாமர்த்தியத்தைப் புருஷனிடம் சொல்லி சந்தோஷப்படுத்தினாள்.

(பதிபக்தி கதை முற்றிற்று)

## வரலக்ஷிமி விரதம்

பரமேஸ்வரன் பார்வதிக்கு வரலக்ஷிமி விரதத்தை சொல்லு கிறார். முன்காலத்தில் மகத தேசத்தில் குட்டினபுரத்தில் சாருமதியென்னுமுத்தமி மகாபதிவிரதை பெரியோரிடமும் புருஷன் மாமியிடமும் பிரியமுடையவள் காலையிலெழுந்து புருஷனுக்கும் மாமி மாமனுருக்கும் பாதபூஜை செய்துவிட்டுதான் மற்ற காரியம் செய் கிறது வேரு புருஷனிடமே பேசமாட்டாள் உரத்த குரலில் யாரையும் பேசுவதுமில்லை இவளுடைய உத்தம குணத்தைக்கண்டு சொற்பனத் தில் லக்ஷிமியானவள் சொல்லுகிறாள் நீ விரதமிருப்பாயானல் சகல ஐசுவரியமுண்டாகும் அதற்கு ஆவணி மாதம் பூர்வபக்ஷம் சுக்ரவாரம் யென்னை ஆராதனை செய்தால் உனது கோறிக்கையெல்லாம் நிறை வேறுமென்று சொன்னதை இவள் புருஷன் மாமியிடம் தெரி. வித்தாள் சரி அந்தப்படி விரதம் செய்யென்றார்கள் விரதம் ஆவணி பூர்வபக்ஷம் வெள்ளிக்கிழமை விரதமிருக்க ஏற்பாடு செய்தார்கள்

சுத்தமான இடத்தில் கோலம்போட்டு மாங்கொத்துகளும் ஆல் அரசு புரசு அத்தி வெத்திலைப்பாக்கு முதலானது வைத்து புதிய அரிசியைக் கொட்டி அதைச்சுற்றி பழவர்க்கங்களையும் வைத்து தேங்காய் கலசம் அலங்கரித்து வரலக்ஷிமியை சோடச பூஜைகள் செய்து நமஸ்கரித்து சகல பாக்யமுண்டாகுகவென்று துதித்தார்கள் இதில் பக்கத்துவீட்டு பெண்களும் கலந்துகொண்டார்கள் மறுபடி சாயங்கால பூஜைக்கு பன்னிரண்டு வகை பலகாரம் செய்து ஒன்பது இலை நூலில் செய்த கயிற்றை வைத்து பூஜைசெய்து கயிற்றை வலக்கரத்தில் கட்டிக் கொண்டு கலசத்தை பிரதக்ஷணம் செய்தார்கள் ஒரு சுத்து வந்த வுடன் காலில் கலகலவென்ற சப்தமுண்டாயிற்று பார்த்தார்கள் சலங்கையாபரணமுண்டாயிற்று மறுமுறை பிரதக்ஷணம் செய்ய கைகளில் நவரத்தின வளையல் உண்டாயிற்று மூன்முவது முறை சுத்த வஸ்திராபரணம் மாடமாளிகை கூடகோபுரம் உண்டாயிற்று சாருமதி பிராமணர்களுக்கு பனிரண்டு வகை பலகாரவகையும் வினியோகித்து அவர்களால் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டார்கள்

மறுபடி அயல் வீட்டுப்பெண்களும் அவரவர் வீட்டுக்கு சென் ருர்கள் சாருமதியின் பாக்யமேயென்று வருஷா வருஷம் இந்த விர தம் நடத்திக்கொண்டு வருகிருர்கள்.

(வரலக்ஷிமி விரதம் முற்றிற்று)

## சித்திரகேது கதை

சூரசேனன் என்னும் பட்டணத்தில் அகண்டமண்டலாதிபதி யாய் சித்திரகேதுவென்று ஒரு அரசன். அவனுக்கு ஆயி ரம் மனைவிகள் அவ்வளவு இருந்தும் புத்திரசந்தானமில்லை.

இப்படியிருக்க நாரதரும் ஆங்கிரீசமகரிஷியும் அவ் விடம் வந்தார்கள் அரசன் எதிர்க்கொண்டு பாதபூஜை செய்து ஆச னத்திலமர்த்தி நமஸ்கரித்து நின்ருன் அரசனை பார்த்து சித்திரகேதா

வன் முகவாட்டத்துடனிருக்கிருயென்ருர்கள் சுவாமி யெனக்கு சகல பாக்யமுண்டாயிருந்தும் புத்திர பாக்கியமில்லை யென்னசெய்வ தென்று சொல்ல நாரதர் உனக்கு புத்திர பாக்யம் உண்டாகச்செய் கிறேன் ஆனல் அதனுலும் துக்கமுண்டாகும் சம்மதாமாவென்ருன் யெப்படியானுலும் சரி குழந்தையுண்டானல் போதுமென்ருன்.

ஆனல் ஒரு யாகம் செய்யென்று சொல்லி அதை தயார்செய்து புத்ரகாமேஸ்டியாகத்தை முடித்து அதில் வைத்த பாயாசத்தை யெடுத்து உன் மூத்த மனைவிக்கு கொடுவென்ருன் அந்தப்படியே கொடுக்க ஒரு ஆண் குழந்தை பிறந்தது அநேக ஆனந்தத்துடன் இருந்தார்கள்.

சில நாளானதும் இந்த குழந்தை வளர்ந்து வருகையில் மற்ற மனைவிகள் துவேஷங்கொண்டு குழந்தைக்கு விஷமிட்டு கொன்றுவிட் டார்கள் ஊர் ஜனங்களே அழத்தொடங்கினுர்கள். தாய்தந்தையர்கள் அதே வியாகூலத்திலிருக்க நாரதர் இதைத தெரிந்து வந்தார் சங்கதி யைத் தெரிந்து அரசனே நான் முன்னமே சொன்னேனல்லவா இந்த குழந்தையைப் பார்த்து துக்கிக்கிருய் உனக்கு மகனுக இருக்கு முன் இந்த குழந்தை ஒருவனுக்கு மகனுக இருந்து இப்பொழுது உனக்கு மகனுனன் இனி இந்த குழந்தை வேருெரு ஜன்மம் எடுத்து அவருக்கு குழந்தையாகப்போகிறது ஆனதால் பிரபஞ்சம் ஒருமாதிரி இருக்காது அவரவர் கற்மானுசாரமாகத்தான் முடியும் உலகம் சொர்ப்பனப்போலத்தான் விவகாரம் ஆனதினுல் பெரியோர்கள் இதை வெறுத்து ஆத்மஞானமடைகிருர்கள் அதுதான் மேலானது என்ருன்.

சுவாமி நான் உணர்ந்தேன் அந்த ஞானத்தை யெனக்கு அருள் புரியவேணுமென்ருன், நாரதர் சொல்கிருர் நான் உனக்கு ஆத்ம ஞானமுபதேசிக்கவேணுமென்றுதான் இவ்விடம் வந்தது நீ புத்திர பாக்யம் வேணுமென்று கேட்டதினுல் கொடுத்தேன். நான் உனக்கு ஒருமந்திரம் உபதேசிக்கிறேன் யென்று மந்திரத்தை சொல்லி இதை கங்கை கரையில் ஏழுநாள் ஜபித்துக்கொண்டிருந்தால் சங்கிருஷ்ண

தேவர் தரிசனமாவார் அவரிடம் ஞானஉபதேசம் பெற்று அந்த ஞானமடைவீரென்று சொல்லிவிட்டு விடைபெற்று

பெண் கூட்டமிருக்குமிடஞ் சென்று அவர்களைப் பார்த்து குழந்தை பேசப்போகிறது கேளுங்களென்று சொல்லி குழந்தையைப் பார்த்து குழந்தாய் உன் தாய் தந்தை துக்கமடைகிறார்கள் நீ உன் சரீரத்தில் புகுந்து துக்கத்தை நிவர்த்தி செய்வாயென்றான் மகரிஷியி னுடைய வார்த்தையைக்கேட்டு குழந்தை சொல்கிறது புண்ய புருஷரே பாவபுண்ணிய ரூப கர்மங்களினாலே தேவர் முதல் மனுஷமிருக முத லான யோனிகளிலே சுழலாநின்ற வெனக்கு இந்த ஜன்மத்தில் இவர் கள் மாதாக்கள் பிறந்து எவ்வளவு காலம் இவர்களிடம் இருக்க வேண்டுமோ அவ்வளவு காலம் இருந்தாய்விட்டது இதுவரை என் கர்மபலன் இனி என்மேலபிமானம் வைப்பதில் யென்னபயன் இனி ஆசை வைப்பது வேண்டாமென்று மறைந்தது.

தாய் தந்தை ஊர்ஜனங்களும் கேட்டு ஆச்சரியமுற்று நியாயந் தானென்று விசனத்தை போக்கிக்கொண்டார்கள். குழந்தையை தகனம் செய்துவிட்டு சித்திரகேது யமுனா நதிக்கரையில் ஏழுநாள் தவஞ்செய்து சங்கிருஷ்ணமூர்த்தி பிரசன்னமாய் அவரால் ஞான உப தேசம் பெற்று ஜீவன்முத்தனாய் அரசு செய்து வந்தான்.

## சித்திரகேது திக்விஜயம்.

இந்த சித்திரகேது இதற்குமுன்னமேயே விஷ்ணுவிடம் வரத்தி னால் சக்கராயுதமும் திக்விஜயம் செய்ய அழியாரதமும் பெற்றிருக் கிறான் இவன் ஜீவன் முத்தியானபின் அந்த ரதத்திலேறி பூலோகத்தை திக்விஜயம் செய்துகொண்டு வருகிறான்.

ஒருவனத்தின் ஆகாயமார்க்கத்தில் வரும்போது ரிஷி கூட்டங் களும் பார்வதியுடன் சிவனும் மத்தியில் பார்வதியை சிவன் மடிமீது வைத்திருப்பதை சித்திரகேது பார்த்து வெட்கி சிவனிடம் ரதத்தை ஆகாயமார்க்கத்தில் நிறுத்தி சிரித்து ஒருவார்த்தை சொல்கிறான்.

பரமசிவமே லோகத்துக்கெல்லாம் கர்த்தாவாயும் சாக்ஷாத் குருவாயும் இருந்துக்கொண்டு மானிடர்கள்போல இந்த சித்தர் கூட்டத்தில் லச்சையில்லாமல் பார்வதியை மடியின்பேரில் உட்காரவைத்து பிராகிருத புருஷரைப்போல யிருக்கலாமாவென்றான்.

இதைக்கேட்ட பரமசிவன் கோபிக்காமல் சிரித்துக்கொண்டிருந்தார் சபையிலிருந்த சித்தர்களும் மௌனமாயிருந்தார்கள் பார்வதி மாத்திரம் கோபாவேசமாய் சித்திரகேதுவைப் பார்த்து கடிந்து ஒரு வார்த்தை சொல்கின்றாள் யென்னையும் பரமேஸ்வரனையும் துஷ்டனையும் ஜீதேந்திரர்களாயும் சொல்லவந்தாய் நீயோ ஒரு நர சரீரி நீ யெங்களுக்கு புத்தி சொல்லப்பட்டவனு இதோ சாபம் யென்று ராக்ஷசனாக போகக்கடவதென்றாள்.

இதைக்கேட்டதும் சித்திரகேது ரதத்தை விட்டிறங்கி பார்வதியையும் பரமசிவனையும் பிரதக்ஷணம் வந்து நமஸ்காரம் செய்து தாயே உன் சாபம் யென்னை யென்ன செய்யும் என் சரீரத்தை மாத்திரம் பாதிக்குமேயல்லாமல் ஆன்மாவை பாதிக்காது அசங்கன் நித்ய முத்தன் நிராகரன் சகலமும் நானே நீயே நான் நானே நீ யெங்கும் நிறைந்த ஆன்மாவாய் இருக்க வியஷ்டி சரீரம் எந்த மாதிரியிருந்தாலென்ன லோகவிவகாரம் கர்மம் நடத்திவைத்துவிட்டது அது அனுபவிக்கட்டும் இந்த சாபத்தை யேற்றுக்கொண்டேன் யென்றான் உடனே ராக்ஷஸ வடிவம் வந்தது புறப்பட்டு போய்விட்டான்

சிவன் பார்வதியை பார்த்து சொல்கிறான் அவன் விஷ்ணுவினுடைய பக்தன் ஜீவன்முத்தன் இந்த சரீரவுணர்ச்சியே இல்லாதவன் அவனுக்கு இந்த சாபம் பாதிக்காது காமகுரோதலோபமற்றவன் மாயையை ஜெயித்தவன் அவன் உனக்கு மறுசாபமிட சக்தியுண்டு நம்மிடம் தயை காட்டினான் சத்துவகுணமுள்ளவன் என பார்வதிக்கு சமாதானம் செய்தார்.

## ராக்ஷசனாய் தேவரிடம் யுத்தம் செய்தல்.

இராக்ஷஸ சரீரம் வந்ததும் ஆத்மஞானம் மறக்கவில்லை ஆனால் அந்த வம்சத்துக்கு தேவர்களிடம் விரோதபாவமுண்டு ஆனதினால் தேவர்களிடம் சண்டைக்கு போகவேணுமென்றே உதித்தது.

தேவேந்திரனிடம் சண்டைக்கு போனான் தேவர்களால் இவனை ஜெயிக்கமுடியவில்லை இந்த சம்பராசூரன் மருபடி திரும்பி திரும்பி அநேக தடவை சண்டை செய்தும் தேவர்கள் ஓட்டம் பிடித்தார்கள்.

மருபடி தேவர்கள் பிரம்மாவிடம் சென்றார்கள் பிரம்மன் தேவர்களோ இவனை உங்களால் வெல்ல ஆக்கிரீசன் முதுகெலும்பினால் வஜ்ஜிராயுதம் செய்து அந்த ஆயுதத்தினால் வித்யாதரனென்னும் அரக்கனை கொல்லவேண்டுமென்றான்.

அந்தப்படியே செய்வோமென்று தேவர்கள் கூடி ஆக்கிரீசமுனியிடம் சென்று தன் முதுகெலும்பை கேட்டார்கள் யாராவது தன்னுயிரை கொடுப்பார்களா நீங்கள் கேழ்ப்பது நியாயமாவென்றான் இந்தப்படி வித்யாதரனைக்கொல்ல பிரம்மன் சொல்படி வந்தோமென்றார்கள் ஆனால் கொடுத்தேன் கொண்டுபோங்களென்று: யோகிகள் சரீரத்தைவிடவேணுமானால் வாசியை கொண்டுபோய் பிரம்மரந்திரத்தில் நிறுத்திவிடுவார்கள் மருபடி வராது அந்தப்படி செய்தார்.

தேவர்கள் சரீரத்தை தேவ தக்ஷனால் முதுகெலும்பை ஆயுதமாக செய்து வித்யாதரனிடம் சண்டைக்கு போனார்கள் இருவரும் சண்டை செய்தார்கள் தேவேந்திரன் வெள்ளை யானையின்பேரிலிருந்து சண்டை செய்ய அவனுடைய வஜ்ஜிராயுதம் தவறி கீழே விழுந்துவிட்டது.

விருத்திராசூரன் அதை யெடுத்து கொடுத்துவிட்டான் அந்த சமயம் தேவேந்திரனை அடித்துவிடலாம் இவன் சத்யவானதலால் நிராயுதனனை யடிக்கக்கூடாதென்று மருபடி அவனுக்கு கொடுத்தான்

பிறகு சண்டைக்கு வந்ததும் ஆவென்று வாயைத்திறந்து தேவேந்திரனையும் யானையையும் விழுங்கிவிட்டான் தேவர்கள் பயந்து நடுங்கினார்கள். இந்திரன் வஜ்ஜிராயுதத்தினால் வயிற்றை பிளந்து கொண்டு வெளியேவர வித்யாதரன் மோக்ஷமடைந்தான்.

(சித்திரகேது கதை முற்றிற்று)

# ஜடபரதன் கதை.



சிந்து தேசத்தில் ரிசுபன் யென்னும் அரசனுக்கு பரதனென்னும் குமாரனிருந்தான். தகப்பன் பரதனுக்கு பட்டாபிஷேகம் செய்துவைத்தான். பரதன் பஞ்சசேனை யென்னும் பெண்ணுடன் வாழ்ந்து ராஜீய காரியத்தை சரிவர நடத்தியும் ஐந்து புத்திரர்களை பெற்றூர்கள்.

சில நாளில் பகவானுடைய கிருபையால் வைராக்யமுண்டாயிற்று இனி இவ்விடமிருந்தால் நாம் மோக்ஷமடைய முடியாதென்றும் வனத்துக்குபோய் தவஞ்செய்தால்தான் மோக்ஷமடையலாமென்று யோசித்து தன் ராஜ்யத்தை ஐந்து குமாரர்களுக்கும் சரியாய் பிரித்துக் கொடுத்துவிட்டு வனத்திற்கு தவஞ்செய்ய புறப்பட்டு நல்ல அழகுள்ள வனத்தில் கண்டக நதியைக் கண்டு ஆனந்தங்கொண்டு இவ்விடம்தான் தவம்செய்ய யோக்யமானவிடமென்று நிச்சயித்து அவ்விடமே ஒரு ஆசிரமம் செய்து வாசம் செய்துக்கொண்டிருந்தார். ஒருநாள் நதியில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கையில் ஒரு பெட்டைமான் நதியில் ஜலம் குடிக்கவந்தது. காட்டினிட சிங்கத்தொனி கேட்டு தன் கெற்பத்திலிருந்த குட்டி சரிந்து வெளிவந்து ஜலத்தில் விழுந்தது மான் ஓடிவிட்டது இதை பார்த்துக்கொண்டிருந்த பரதர் மான்குட்டி தவிப்பதைப்பார்த்து அந்த மான் குட்டியை யெடுத்துவந்து தன் ஆசிரமத்தில் வளர்த்தார் சிலநாளில் மான்குட்டி பெரியதாகிவிட்டது இதன்பேரில் பிரியம் அதிகமாகி அதை இடைவிடாது கூடவே அழைத்து திரிந்தார்.

ஒருநாள் அதை ஆசிரமத்தில் தனியாய்விட்டு கங்கை கரைக்கு போய்விட்டார் இந்த மானை புலி கொண்டுபோய்விட்டது மருபடி வந்துபார்க்க காணேம் புலி கொண்டுபோய்விட்டதென்று அதே வியாகூலத்துடனிருந்தான்.

இவன் தவநிலையெல்லாம் கெட்டுப்போய் சஞ்சல மனதுடையவனுகவே சிலகாலத்தில் காலமாய்விட்டது மருபடி இந்த மானின்

நினைவு இருந்ததினால் மானாகவே பிறந்தான் இந்த மானுக்கும் பூர்வக்கியானமிருந்ததினால் முன் இருந்த காட்டிற்கே வந்து வாசஞ் செய்து வந்தது.

நான் முன் இந்த வனத்தில் மானிடனாக இருந்து மானை வளர்த்து அதன்மேல் பற்று இருந்ததினால் மான் ஜன்மம் எனக்கு வந்துவிட்டதென்று வியாகூலப்பட்டது சிலகாலம் அதுவுக்கும் காலம் முடிந்து மருபடி ஒரு பிராமணன் வீட்டில் பிறந்தான்

தகப்பனுக்கு இரண்டு பெண்சாதி மூர்த்த பெண்சாதிக்கு ஒன்பது குழந்தைகள் இரண்டாவது பெண்சாதிக்கு இரண்டு குழந்தை ஆண் ஒன்று பெண்ணொன்று ஆண் குழந்தைதான் இந்த பரதன் இவனுக்கு பூர்வக்கியானம் உண்டு இவன் இந்த சம்சாரத்தை பார்த்து பயந்து நான் இந்த பந்தத்தில் அகப்பட்டுக்கொள்ளக்கூடாதென்று பாலப்பருவம் வந்ததும் பைத்தியக்காரனைப்போல நடித்துக்கொண்டு சம்சார பந்தத்தினின்று தப்பித்துக்கொள்ள யேற்பாடு செய்தான்.

தகப்பன் மகனை பத்து வயதானவுடன் சந்தியாவந்தன ஜபதபங்கள் செய்துக்கொள்ள மந்திரங்களை உபதேசம் செய்தார் அதை சரியாய் தெரிந்துக்கொள்ளாதவனைப்போல காட்டினான் ஊரிலுள்ளவாகள் இவனை பயித்தியக்காரனென்று சொல்லும்படி செய்துகொண்டான் முன் ஜன்ம பூர்வக்கியானமிருந்ததினால் பிரம்மபாவனையாகவே திரிந்துக்கொண்டிருந்தான்.

தகப்பன் இவனைப் பயித்தியனென்று விட்டுவிட்டான். யாதொரு காரியமும் அவனிடம் சொல்லுவதில்லை. சில காலத்தில் தகப்பன் காலமாய்விட்டான. பரதன் தாயாரும் காலமாய்விட்டாள். இருவரும் போனபிறகு இந்த குழந்தைகளை சக்களத்தியாகிய முதல் மனைவி போஷித்துவந்தாள். பரதனை கெவனிப்பாரில்லை. வெளியில் புறப்பட்டுவிட்டார், ஊர் ஊராய் திரிகிறார். எப்படியென்றால்:—

இருப்பது பொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
யொருத்தருக்கும் தீங்கினைநீ யெண்ணாதே
பருத்த தொந்திநம்மதென்று நாமிருக்க நாய்
நரிகள் பேய்கழுகு தம்மதென்று தானிருக்குந்தான்.

காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
யோடே யெடுத்தென்ன உள்ளன்பிலாதவ ரோங்கு செல்வம்
நாடேயிடைமருதி சற்குருமெய்யன்பர் நாரியற்பால்
வீடேயிருப்பினும் மெஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே.

இந்தப்படி திரிந்துக்கொண்டே வேறுதேசம் சென்று ஒரு இடத்தில் அமர்ந்திருந்தான் அந்த ஊரில் ஒரு குடியானவன் நரபலி காளிக்கு கொடுப்பதாக பிரார்த்தனை செய்ததற்கு ஒருவனைத் தயார்செய்து வைத்திருந்தார்கள். சாயங்காலமானதும் அவன் இது சங்கதியை எப்படியோ தெரிந்து ஓடிவிட்டான். இராத்திரி பலி கொடுப்பதற்கு இவனை தேடி காணுததினால் மருபடி பரதன் கிடைத்தான். இவனிடம் இனிய வார்த்தைகளைச்சொல்லி இவ்விடம் காளி கோவிலில் பூஜை நடக்கிறது. அவ்விடம் ஆகாரம் கிடைக்கும் வாவென்று அழைத்தார்கள்; சரியென்று போனன்; இவனை குளிப்பாட்டினார்கள். சந்தனம் பூசி மாலைபோட்டு அலங்கரித்து பழம் தேங்காய் பூஜை செய்து இவனை விழுந்து கும்பிடச்சொன்னார்கள்.

கபடில்லாமல் விழுந்து கும்பிட்டான் பூசாரி ஒரு வாளாயுதத்தை யெடுத்து வெட்டப்போனன். அவ்வளவுதான் காளி பிரசன்னமாய் அந்த வாளைப் பிடுங்கிக்கொண்டு அவ்விடமிருந்தவர்களையெல்லாரிட சிறங்களையும் துண்டமாக்கி மாலையாக கோர்த்து கழுத்திலணிந்து கூத்தாடினள்.

என் பக்தன் பரம ஞானியே, இன்று முதல் நீ என்னுடைய தாசனாய் பூரண ஜீவன் முத்தனாய் மோக்ஷமடைவாய் போய்வாருமென்று ஆசீர்வதித்து அனுப்பிக்கொடுத்தாள்.

மறுபடி எப்போதும்போல திரிந்துக்கொண்டிருந்தார். அவ்விடம் சிந்து தேசத்தரசன் அந்த மார்க்கமாக பல்லக்கின்மேலேறிக்கொண்டு அந்த பரதன் இருக்கும் வழியே வந்தார்கள்.

அவ்விடம் வந்ததே இந்த பரதனை ஒரு பல்லக்குதூக்கும்போயன் இவனை வாவென்று அழைத்து இதை பிடியென்று அவனை பிடித்து தூக்கிக்கொண்டு போகும்படிச் செய்தான்:

இவன் புது ஆளானதினல் கால் நடை சரியில்லாததினல் பல்லக்கு ஆட்டம் கொடுத்தது. அரசன் இதுவென்ன ஆட்டமென்றான் புது மனிதன் நடை சரியில்லாததினலாட்டமென்றார்கள்.

ராஜா சொல்கிறார், தம்பி, நீ சிறுவயதுடையவனுச்சே சரியாக யேன் நடக்கலாகாது என்றார். இவன் ஒன்றும் பேசவில்லை. முன் போலவே நடக்க ராஜாகோபமாய் சொல்கிறார். பிராணனுடன் இருக்கையிலேயே மடிந்தவன்போல போகிறாய் உன்னை தண்டிக்கிறேனென்றார்.

இதைக்கேட்ட ஜடபரதன், அரசனே தண்டிப்பதாக சொன்னீர். ராஜாவென்பது யார்? சேவகனென்பது யார்? தண்டிப்பது யாரை? நானே ராஜா இவர்களெல்லாம் சேவகர்கள் என்று சொல்வீராகில் ஞானமல்லாத அஞ்ஞானமாய்விட்டதல்லவா.

உன்மத்தனைப்போலவும், மூடனைப்போலவும், ஊமையைப்போலவும், குருடனைப்போலவும், செவிடனைப்போலவும் இருக்கும் யெனக்கு உம்மாலே செய்யப்பட்ட தண்டனையால் யெனக்கு ஆகவேண்டியதென்ன பிரார்த்தம் அனுபவிக்கட்டும் என்று சொல்லிவிட்டு நடந்தான்.

ரகுணராஜா இவ்வார்த்தையைக் கேட்டதே இவர் மகா பெரிய ஞானியென்றெண்ணி பல்லக்கை நிறுத்தென்று கீழே இரங்கி பரதனை நமஸ்கரித்து ராஜாவென்னும் அபிமானத்தைவிட்டு ஒரு வார்த்தை சொல்கிறார்.

தாங்கள் பைத்தியனைப்போல வந்திருக்கும் முனியே நீர் யார் தெரியப்படுத்தவேணுமென்றார். அப்பனே நான் ஜடபரதன் நீ விவேகியானதால் தெரிந்துக்கொண்டாய். நீர் எவ்விடம் போகிறீரென்றான். பரதன் சுவாமி கபிலரிடம் ஞானவுபதேசம் பெற்றுக் கொள்ளப்போகிறேன் தெய்வாதீனமாய் தாங்கள் நேரிலே வந்துவிட்டீர் ஆனதால் பிரம்மஞானத்தை உபதேசிக்கவேணுமென்றார் ஆனல் நீர் உத்தமனனதினல் உபதேசிக்கிறேன் கேளும்.

இந்த ஜீவனுக்கு உபாதியானது எந்தமட்டும் சம்சாரபந்தங்களுக்கு பற்றில்லாமலிருக்கின்றதோ அதுவரை சம்சாரத்தில் பிரமித்துக்கொண்டிருப்பான் சோகமோகமாசை உண்டுபண்ணுகிறது இந்தப்பிரம்மை யெல்லாம் விட்டவனுக்கு அரியினுடைய பாதாரவிந்தமாகிய பிரமபதம் கிடைக்கிறது. நித்யமாகியும் அகண்டமாகியும் யோகமாகியும் ஆதியந்தமில்லாததாகியும் அறிவுரூபமாகியும் இருக்கப்பட்ட அந்த பிரம்மவஸ்துவினுடைய சொரூபமே மோக்ஷமென்பார்கள் இதனை சர்வஞ்ஞன் சர்வத்துக்கும் சாக்ஷி அவனே. ஜீவன்முத்தனவனே விதேகமுத்தனவனே இத்தப்படி உபதேசித்ததைக்கேட்டு ராஜாவானவர் ஆனந்தங்கொண்டு ஜடபரதனை நமஸ்கரித்து தன் பட்டணம் போய்சேர்ந்தான்.

(ஜடபரதன் கதை முற்றிற்று)

## பதிவிரதையின் லக்ஷணங்கள்.

பரமசிவன் பார்வதிக்கு குலமங்கையர் நடந்துக்கொள்ள வேண்டிய விதியைச் சொல்லுகிறார். கேளாய் பிரியமுள்ள பார்வதியே ஸ்ரீகள் புருஷனிடம் நடந்துக்கொள்வது சொல்லுகிறேன் கணவன் வெளியிலிருந்து வீட்டுக்குள் வரும்பொழுது எதிர்கொண்டழைத்துவரவேண்டியது. புருஷனுடன் பேசும்போது அடக்கத்துடன் பேசுதல் தவிர தன் புருஷன் பாதத்திலேயே பார்வையை செலுத்தல் ஆசனம் கொடுத்து உபசரித்தல் தானே பணிவிடை செய்தல் புருஷன் தூங்கியபின் தான் தூங்குதல் தவிர ஸ்ரீகள் தங்கள் சரீரத்தை எப்பொழுதும் ஸ்நானதிகளினால் சுத்தமாக வைத்துக்கொள்ளல் திலகமிட்டு அலங்கரித்துக்கொள்ளல்வேண்டும் புருஷனிடம் கூச்சமில்லாமல் பேசவேண்டும் பிறந்த வீட்டுக்குப்போனால் அதிகநாள் இருக்கக்கூடாது உரத்து பேசக்கூடாது காரணமின்றி நகைத்தல் கூடாது கணவன் வெளியூருக்கு போயிருக்கும்பொழுது தன்னை அலங்கரித்துக்கொள்ளக்கூடாது அயல் வீட்டு உரவு செய்துக்கொண்டு அடிக்கடி போவது கூடாது.

கற்பில்லாதவரோடு பேசுவது கூடாது இந்தப்படி பலகுற்றங்களை செய்யக்கூடாது அவசியம் தூரவீட்டுகளுக்கு போகநேரிட்டால் துணையின்றி செல்லக்கூடாது கணவன் செல்வவந்தனானாலும் ஏழையாயிருந்தாலும் மூடனாயிருந்தாலும் அழகுள்ளவனாயிருந்தாலும் குரூபியாயிருந்தாலும் அவனை தெய்வமாக பாவித்து அவனிடம் அந்தரங்கமான விசுவாசம் வைத்து மகிழ்விக்கவேண்டும்

கணவனுடைய சரீர நிலைமை தெரிந்து இனிய பத்தியமான உணவுகளால் புருஷனை போஷிக்கவேண்டும் கடுகடுத்த வார்த்தை பேசாமல் மலர்ந்த முகத்துடன் பேசவேண்டும்.

கணவனுடைய வரவுக்குமீறிய செலவு செய்யக்கூடாது தன்னை கற்பினின்று காத்துக்கொள்ளல்வேண்டும் ஸ்ரீகள் எந்தகாரியமும் கணவன் உத்திரவன்னியில் சுதாவாய் செய்யக்கூடாது.

பெண்கள் பால்யத்தில் தகப்பன் ஆக்ஞையிலும் யௌவனத்தில் புருஷன் ஆக்ஞையிலும் கணவனுக்குப்பின் பிள்ளைகளின் ஆக்ஞையிலும் இருத்தல் வேண்டும் எப்பொழுதும் ஸ்ரீகள் சுதந்திரத்தில் இருக்கக்கூடாது.

ஸ்ரீகளுக்கு நாணம் மடம் அச்சம் பயிர்ப்புகுணமுடையவர்களாயும் அன்னியரிடம் காரணமின்றி பேசவும்கூடாது அவர்கள் உறவு கொள்வது கூடாதகாரியம்.

பாட்டு

புன்மை வழிவிலகி புல்லரிடம் நீங்கி நன்மைமிகும் ஆலயங்கள்
நாடுகின்றவளாயுமிருப்பவளே கற்புடைய பெண்மணியாவாள்

தான் குபேரன் மகளானாலும் வித்தையில் சிறந்திருந்தாலும் ரம்பையைப்போல அழகுடையவளானாலும் ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்டால் மேல்கண்ட செறுக்கை கொள்ளாமல் கணவனையே தெய்வமாக பாவிக்கவேண்டும்.

கணவன் துற்நடத்தையுடையவனாயிருந்தால் மனைவி அவன் குணத்தை நன்றாய் அறிந்து வணக்கமுதலான பாராட்டு சமானங்களினாலும் பணிவிடைகளினாலும் புருஷனை சீர்திருத்தலாம் எதிர்த்து பேசுவதனால் காரியம் கெட்டுபோகுமேயன்றி சமாதானமுண்டாகாது

கற்புடைய மங்கையற்கு கணவனே தெய்வமென்று பழமொழியுண்டு பதிபக்தியுள்ள மங்கையர்கள் பதிவிரதாயென்று சொல்லப்படுவது. இவர்களுக்குத்தான் ஆன்மஞானமுண்டாகும் முன் காலத்தில் மைத்திரேயி சூடாலை லீலை தேவபூதி முதலானவர்கள் ஆத்மஞானமடைந்திருக்கிறார்கள் சூடாலை தன் புருஷனுக்கு ஞான நிச்சயித்தில் பேதமுண்டான காரணம் அவர் காட்டுக்கு தவஞ்செய்ய போய் விட்டார் சூடாலை புருஷனை யீடேற்றும்பொருட்டு கஷ்டப்பட்டு சித்துகள் கற்று அந்த சித்துவலிமையினால் வேறு பிரம்மரிஷி வடிவமெடுத்து புருஷனிடம் சென்று அவனுக்கு ஞானவுபதேசம் செய்து ஞானியாக்கி மறுபடி தன் பட்டணம் கூட்டிவந்து முன்போல அரசாங்கம் செய்தார்கள். [இது சிகித்துவசன் கதையில் பார்க்க.]

ஆகையினால் பதிவிரதா சிரோன்மணிகள் தன் நாயகனை தெய்வமாகவே பாவிப்பார்கள் இந்த கலியுகத்திலும் அநேகர் இருக்கிறார்கள் அவர்கள் எளிதில் ஞானத்தையடையலாம் இந்த சமுசாரம் துக்கரூபமுடையது அதிலும் ஸ்திரீகளுக்கு துக்கமதிகம் மைத்திரேயி தன் கணவனிடம் சொல்லுகிறாள் இந்த காமரூப விருக்ஷம் அநேக வியாதியோடு கூடியது துர்கந்தமுடையது நானாவிதமான துக்கத்தையுடையது கெற்பத்தினாலும் துக்கமுண்டு சுதந்தரமில்லாத சரீரம் காமரூப சரீரம் அநேக ஆடவரை சம்சாரபந்தத்தில் ஈடுபடுத்தும் காமரூப விருக்ஷம் இது சீக்கிரம் அழிவதே மேல் ஆனதினால் எனக்கு அந்த ஆத்ம ஞானமே வேண்டும் மற்ற தனதி சுகங்கள் வேண்டாம் என்று சொன்னதினால் அந்தபடியே கணவன் ஆன்மஞானம் உபதேசித்தார் இது வேதத்தில் சொல்லியிருக்கிறது பெண்கள் அவசியம் ஞானமடையவேண்டியது பெரியோர்கள் அநேக நூல்களில் ஞானநூல் இருக்கிறது அதைவுணர்ந்து தெரிந்துக்கொள்ளலாம் உபதேச மொழிகள் தன் புருஷனிடமே தெரிந்துகொள்ளவேண்டும் அவருக்கு தெரியா

விடின் உத்தமகுருவினிடம் உபதேச மொழி தெரிந்துகொள்ளலாம் மைத்தபடி வேதாந்த நூல்களை படித்தே எல்லாம் தெரிந்துகொள்ள லாம் ஸ்ரீகள் அன்னிய ஆடவரிடம் அணுக சுதந்திரமில்லாததினால் தனியாகவே ஆராய்ச்சி செய்து நிஷ்டை முதலானதும் செய்து முக்தி யடையலாம்.

(பதிவிரதையின் லக்ஷணங்கள் முற்றிற்று)

## பெண்களின் ருது காலப்பலன்

ஸ்ரீ பார்வதி சிவனைப்பார்த்து ஓ தேவா ஸ்ரீகளின் மாதவிடாயின் தன்மையைப்பற்றி தெளிவாய் சொல்லவேண்டும் என அதற்குச்சிவன் சொல்லத்தொடங்கினார். ஓ தேவி நான் சொல்வதை கேட்பதினால் உனக்கு ஞானம் விருத்தியாகும் ஸ்திரீகளுடைய மாதாந்த ருது முதல் பன்னிரண்டு வயதில் உண்டாகி ஐம்பது வயது வரைக்கும் அவர் களுக்கு இருக்கும் இந்த மாத ருதுவானது முன் சொல்லப்பட்ட காலமாகிய பன்னிரண்டு வயது தொடங்கி ஐம்பது வயதுவரை ஸ்திரீ களுக்கு ஒவ்வொரு மாதத்திலும் மூன்றுநாள் கர்ப்பப் பையிலிருந்து இரத்தம் சுயேச்சையாய் வழிந்தோடும்.

சுக்கிலபக்ஷ திதியில் பெண்கள் முதலில் பிரவடையானாலும் கிருஷ்ணபக்ஷத்து திதியில் பிரவடையானாலும் அதன் பலனைச்சொல் கிறேன் கெவனமாய்கேள். பக்ஷத்தின் முதல் நாளில் பிரதமை திதி யில் முதல் ருதுவானால் அந்த கன்னிகை கொஞ்சகாலத்தில் உயிர் இழந்துபோவாள் இரண்டாவது தினம் (துவிதிகை) தினமானால் ஞானசக்தி மனோசக்தி இழப்பாள், மூன்றாவது திதியில் ருதுவானால் ஸந்ததியுண்டாகாது, நான்காவது (சதுர்திதியில்) ருதுவானால் மலடி யாவாள், ஐந்தாவது ஆறாவது நாளாகிய (பஞ்சமி) (சஷ்டி) திதியானால் அர்ப்பாயுசால் சீக்கிரம் மரணமடைவாள், ஏழாவது நாள் (சப்தமி) யானால் அவளுக்கு ஒரே குழந்தைதான் பிறக்கும் எட்டாவது (அஷ்டமி) யானால் கொடும்பாவியாவாள், ஒன்பதாவது (நவமி)யானால் பனித

சுபாவத்தையடைகிருள், பத்தாவது (தசமி)யானல் பிசாசு குணத்தை கொண்டிருப்பாள் (ஏகாதசியில்) ருதுவானல் பெண்பேயேயென் றறிந்துகொள், பனிரண்டு (துவாதசி)யில் ருதுவானல் துஷ்டதேவதை யின் சுபாவமுடையவள், (திரயோதசியில்) ருதுவானல் தன் புருஷ னுக்கு பத்திவிசுவாசமுள்ள மனைவியாவாள் பதினன்காவது (சதுர் தசியில்) தரித்திரதிசையடைவாள், சுக்கிலபக்ஷத்தில் பௌர்ணமி யில் ருதுவானல் அவள் தேவலோகத்து ஸ்திரீபோலாகிமகாலக்ஷிமியே பிரத்தியக்ஷமாகி அவதாரமாக வந்துவிட்டாளோ என்று சொல்லப் பட்ட பாக்கியவதியாவாள், கிருஷ்ணபக்ஷத்து அமாவாசையில் ருது வானல் நோயால் பீடிக்கப்படுவாள்.

## வாரப்பலன்

ஞாயிற்றுக்கிழமை புஷ்பவதியானல்—கைம்பெண்ணுகிருள் (விதவை)
திங்கட்கிழமையில் ருதுவானல்—பக்திவிசுவாசமுள்ள மனைவியாவாள்
செவ்வாய்க்கிழமை ருதுவானல்—தன்பதிவிரதா தர்மத்தை இழந்து விடுவாள்
புதன்கிழமை ருதுவானல்—பணகுவியலில் கிடந்து புரள்வாள் பாக்கியவதியாவாள்
வியாழக்கிழமை ருதுவானல்—தனவானன புருஷனை பதியாக அடைகிருர்கள்
வெள்ளிக்கிழமை ருதுவானல்—அநேகம் புத்திரர்களை பெறுவாள்
சனிக்கிழமை ருதுவானல்—மலடியாவாள்

## மாதபலன்

சித்திரை மாதத்தில் முதல் ருதுவானல்—காமபித்துபிடித்து மோக வெறிகொள்வாள்
வைகாசிமாதம் ருதுவானல்—மதுரமொழியுடன் ஜன விசுவாச முடையவள்ர்வாள்
ஆனிமாதம் ருதுவானல்—விதவை தனத்தையடைவாள்
ஆடிமாதம் ருதுவானல்—மிகப்பணக்காரியாவாள்
ஆவணி மாதம் ருதுவானல்—பெருகிற குழந்தை பாலபருவத்தில் இறந்துவிடும்
புரட்டாசி மாதம் ருதுவானல்—நோயில் பலவித வருத்தப்படுவாள்
ஐப்பசி மாதம் — பிறக்கும் குழந்தை அர்ப்பாயுசாய் இறந்துவிடும்

கார்த்திகை மாதம் — துர்பாக்கியவதி குடும்பமே நாசமுறும்
மார்கழி மாதம் — தேவபக்தியுடையவளாவாள்
தை மாதம் — சிற்றின்பத்தில் மோகமுடையவளாவாள்
மாசி மாதம்—ஈஸ்வரபக்தியுடையவளாயும் புருஷனிடம் பக்தியுடைவளாவாள்
பங்குனி மாதம் — அநேக குழந்தைகள் பெற்று சுகித்திருப்பாள்

## நக்ஷத்திரபலன்

பூரட்டாதி நக்ஷத்திரம் பூரம் நக்ஷத்திரம் இந்த இரண்டும் உச்சமாயிருக்கும்போது பரணி திருவாதிரை மிருகசீடம் இந்த நக்ஷத்திரங்கள் உச்சமாயிருக்கும்போது அவள் ருதுவானால் புருஷனை இழந்துவிடுவாள் மகா நக்ஷத்திரத்தில் ருதுவானால் குழந்தைகளின் சாவினாலும் சுற்றத்தார்கள் சாவினாலும் உண்டான துக்கத்தினால் துக்கத்தையடைவாள் புனர்பூச நக்ஷத்திரத்தில் ருதுவானால் மலடியாவாள் கிருத்திகையானால் துன்பமுண்டாகும்.
இந்தப்படி வேத நூல்களில் சொல்லப்பட்டது இதை தெரிந்துகொள்க

## ஜாதி நாலும்

பத்மினி சித்தினி சங்கினி ஹஸ்தினி (யானை)

பத்மினி மகாபதிவிரதை அதிக பயபக்தியுடன் தன் கணவனிடம் நடத்துக்கொள்வாள் தெய்வபக்தியுள்ளவள் அன்னநடையுடையவள் மிகுந்த அழகுடையவள் சிந்தாமுகமுடையவள் தாமரை மலர் வாசனையுடையவள்

சித்தினியோ அழகையுடையவள் எப்போதும் உண்மை உரைப்பவள் தெய்வபக்தி குருபக்தி பதிபக்தியுடையவள் தன் புருஷனைவிட அன்னியரிடம் போகிக்காதவள் சொர்ப்ப சம்போகத்தில் பிரீதியுடையவள் பாவஞ்செய்ய மனமில்லாதவள் அழகான மார்புடையவள்.

சங்கினி காரவாரனையுடையவள் நீண்டு வளவளப்பான அழகுடையவள் நிமிர்ந்த மூக்குடையவள் எப்போதும் பசியுடையவள் அன்னியரை தீங்குசெய்யும் மனமுடையவள் அவள் நகைப்போ சிற்றின்ப ஆசையை மூட்டிவிடும் அன்னியரைகூடி தன் ஆசையை தீர்த்துக்கொள்வாள் காமவெறி பிடித்தவள் இவள் சங்கினியாவாள்

ஹஸ்தினி கெட்ட வழக்கங்களில் விருப்பமுடையவள் நடத்தை கெட்டு சீரழிந்தவள் தடித்த தேகமுடையவள் பரட்டைமயிர்தலை யுடையவள் புன்னகை செய்யும் உதட்டையுடையவள் சிவந்த கண் நீண்டுபருத்த கொங்கை வாயாடியும் சற்றேரக்குறைய ரூபவதி யெனலாம் தடித்த குரல் நாணமில்லாதவள் காமவெறிபிடித்தவள் அன்னிய புருஷரிடம் இச்சைகொள்பவள் இவர்களுக்கு கால்விரல் நீண்டிருக்கும் கழுத்து சிறுத்திருக்கும் காரபதார்த்தம்தான் பிரியம் கற்றுலை நாத்தமுடையவள் இவர்கள் புருஷரிடம் வாழாமல் வேசி யாய் போவது தான் அதிகமுண்டு.

## உத்தமஜாதி

உயரமல்லாதவளும் குட்டையல்லாமலும் நடுத்தரமாயும் அழகிய நிறமாயும் ஒற்றைநாடியுடம்பையுடையவளும் யானை நடையும் தாமரை புஷ்பம்போல் உள்ளங்கையும் புருஷனிடம் பக்தியுள்ள நற்குண முடைய நடுத்தர மார்புடையவளும் இக்குணமுள்ள பெண்கள் உத்தம ஜாதி.

## மத்திமஜாதி

நடுத்தரதேக பரிணமம் நீண்டுவழிந்துதொங்குகின்ற அழகபார முடையவளும் பதிவிரதா சுபாவமுள்ளவளும் அடக்கமுள்ளவளும் ஆழமுள்ள தொப்பிலுள்ளவளும் இன்சொல் தேவபக்தி கொஞ்ச ஆகாரம் பகவானை தியானம்செய்து துதிப்பவள்.

## அதமஜாதி

நீச்ச ஜாதிக்கு கைகால் மெல்லியதாயிருக்கும் தேகமுழுதும் ரோமம் நிறைந்திருக்கும் கண் பூனைக்கண்போலிருக்கும் பற்கள் நீண்டு பருத்திருக்கும் சொரசொரப்பான தோலுடையவள் எப்பொழு தும் புலம்புவள் வெட்கமற்றவள் மூர்க்கத்தன்மையுள்ளவள் நீண்ட கால் கையுடையவள் நீளமில்லாத அற்பதலைமயிருள்ளவள் ஸ்ரீகளு டைய ஒழுக்கங்களில் குறைவுபட்டவள் இந்தகுணமுள்ள பெண்களை நீக்கிவிடவேண்டியது.

## ஆண்கள் ஜாதி நாலு

1. முயல்ஜாதி — சுந்தரமுகத்தையுடையவன் தெய்வபக்தியும் செல்வமுடையவன் உத்தமன்.

2. மான்ஜாதி — குளிர்ந்த தேகமுடையவன் புன்சிறிப்புடையவன் பக்தியுடையவன் அன்னதானம் செய்பவன்.

3. விருக்ஷபஜாதி — பருத்த சரீரமுடையவன் பெரும்திண்டியுடையவன் ஸ்திரீ மோகமுள்ளவன் பாபசெயலுள்ளவன்.

4. அசுவ அல்லது குதிரைஜாதி — கருத்தமேனி தெய்வபக்தியில்லை காமத்தில் கெட்ட மகாபாபிஷ்டன்.

## மகாவாக்கிய உபதேசம்.



மஹா வாக்கியஞ் சொல்லப்பட்ட ஞானமே ஞானம். அதுவல்லாமல் சொல்லப்பட்ட ஞானங்களெல்லாம் அறிவு வுதயமாகும் ஞானமே ஆனபடியினால் ஆசாரியர் சிஷ்யனுக்கு அனுகிரஹம் செய்கிறார்.

அஃதெப்படி யென்றால் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்கின்ற நான்கு வேதங்களும் இரண்டு பிரகாரமாயிருக்கும். அவையெவையென்னில், அர்ப்ப சுருதி வாக்யமென்றும் பிரபல சுருதி வாக்யமென்றும் இரண்டு. இதில் அர்ப்ப சுருதி வாக்யம் கற்மகாண்டத்தைச் சொல்லும் பிரபல சுருதி வாக்கியம் ஞானகாண்டத்தைச் சொல்லும் இது முப்பத்திரண்டு உபநிஷத்தாயிருக்கும் இது நான்கு வாக்கியங்களை பிரதிபாதிக்கும் அவையாவன பிரஞ்ஞானம் பிரஹ்மம் அகம்பிரம்மாஸ்மி தத்துவமசி அயமாத்ம பிரம்மம் என்பனவாம் இந்த நான்கு வாக்கியமும் ஜீவ பர ஐக்கியத்தைச் சொல்லும் இதை தத்துமசி மகாவாக்கியமென்று சொல்லப்படும் இது மூன்று பிரிவாக தத்பதம் துவம்பதம் அசிபதமென்று இது ஜீவ பர ஐக்கியம் இவைகளாம்.

தர்ப்பதத்திற்கு நீ யென்றும் துவம்பதத்திற்கு ஜீவன் யென்றும் இரண்டினுடைய ஐக்கியம் அசிபதமாம் நீ அது ஆனாய் என்பது பொருள்படும். அது நீயானாயென்றும் போதிக்கப்படுதலாம் அதனால் தான் சோகம, பாவனை செல்லப்பட்டது. நான் பிரம்மமென்பது பொருள்.

இது எப்படி வழங்குமெனில் ஆச்சாரியர் மூலம் அவர் சொல்லினாலே சிரவணமனனம் நிதித்தியாசனம் சொல்லினாலே விளங்கும்.

வள்ளலார்

சிவனுக்கு திருமேனியுண்டோ இல்லையோ உண்டென்றால் நம்மிலொருவர் இல்லையென்றால் வேதாகமமில்லை வழிபடு மாணுக்கருமில்லை ஆனால் திருமேனியுண்டானதெப்படி

தியானத் திருமேனியுண்டு

இதற்கு வசனமுண்டோ உண்டு

அது எப்படி

அருளே திருமேனி யான்மத் திருமேனி
குருவே திருமேனி கொள்
ஆனால் அந்த சிவன் எங்கே யிருப்பான்

கயிலாயம், காசி, காஞ்சி முதலிய ஸ்தலத்திலிருப்பார்.

நாமரூபமானதால் முத்தி யென்னமாய் முடியும்

ஆனால் எங்கும் வியாபி சர்வேந்திரியாமி சர்வ பரிபூரணன் சர்வலோக நாயகன் சர்வசாக்ஷி (ஈஸ்வரா சர்வ பூதானும்)மென்னும் வசனத்தால் சிவனெங்கு மிருப்பதே சித்தாந்தம்.

ஆனால் ஆலயத்திலிருப்பதாக அவ்விடமேன் போகிறார்கள்

பசுவினிடம் பால் இருக்குமானாலும் முலைக்காம்பினால் வெளி படுதல் போலவாம் அதுபோல கயிலை முதலிய ஸ்தலங்களில் சிவ தியானிகளின் சித்தத்தில் வெளிப்படுவார்.

ஆனால் யெனக்கு தெரியவில்லையே எங்குமிருப்பவர் உன் அறிவிலுமிருப்பார் ஆனால் அந்த அறிவுவேறு நான்வேறு அந்த அறிவே

நீதான் ஆனுல் எனக்கு தெரியவில்லையே வெளிமுகத்தில் தெரியாது அகமுகத்தில் தெரியும் நான் வேறு அறிவு வேறோ நீ அனுபவித்தால் தெரியும்.

அனுபவித்தவர் யார் சுகர்வாமதேவர் பட்டணத்தடிகள் பத்திர கிரியார் முதலானவர்கள் எனக்கு ஏன் தெரியவில்லை சிற்றறிவு பேரறிவு இரண்டு. பேரறிவு உள்ளவனுக்குத் தெரியும்.

இதனுல் சிவனை யடைவாய்

உலகில் நால்வகை யோனியில் 84 லக்ஷபேதம் ஜீவராசிகள் இருக்கின்றன. தேவர்கள் 14 லக்ஷபேதம் மானிடர்கள் 9 லக்ஷபேதம் மிருகங்கள் 10 லக்ஷபேதம் ஊர்வன சர்ப்ப முதலானதுகள் 11 லக்ஷ பேதம் நீரில் வாழும் ஜந்துகள் 10 லக்ஷம் தாவரம் புஷ்பபூண்டுகள் மரம் செடி 20 லக்ஷபேதம் பாதாள ராக்ஷஸ யோனி 10 லக்ஷம் ஆக 84 லக்ஷபேதங்கள்.

## தத்துவங்கள்

இந்த சரீரம் 96 தத்துவங்களுள்ளது
இதில் தூலதேகம், சூக்ஷமதேகம், காரணதேகம், ஆக 3.
இதில் ஜாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தியென்று மூன்றுள்ளது
பூதம் 5. ஞானேந்திரியம் 5. தன்மாத்திரை 5 கர்மேந்திரியம் 5. ஆந்தக்கரணம் 4.

## இதற்கு ஆத்ம தத்துவமென்பது

வித்யா தத்துவம் 7. சிவ தத்துவம் 5. பிரிதிவியின் கூறு 5. அப்புவின் கூறு 5. தேயுவின் கூறு 5. வாயுவின் கூறு 5. ஆகாசத்தின் கூறு 5. வாயுக்கள் 10. தசநாடி 10. வசனுதிகள் 5. வாக்கு 4 குணம் 3. அகங்காரம் 3.

ஆக 96 தத்துவங்கள்.

## முக்கியமானது

மந்திரத்துக்கு-பிரணவம் அக்ஷரத்தில்-அகாரம் தேவர்களில்-இந்திரன் ஏகாத சருத்திரர்களில்-சங்கரன் பிரம்மரிஷிகளில்-பிருகுமுனி ராஜ ரிஷிகளில்-கபிலர் அசுரரில்-பிரகலனுதன் முக்கியமானவர்கள்.

# பிரம்மவித்து முதலியவர்கள் இலக்கணம் பிரமவித்து.

மகாவாக்கிய விசாரத்திலுண்டாகிய ஞானத்தினால் ஆவரண அத்தியாசங்களின் நிவர்த்தியால் பூரணாநந்தப் பிரமத்தை ஞானவடி வத்தால சாக்ஷாத்தாக அறிந்தவன் பிரமவித்து இந்த ஜாக்கிர பிரபஞ்சம் சொப்பனம் போலத்தோன்றும்-இவனே உபதேச வாயிலாக வேதாந்த சம்பிரதாயங்களின் பிரவர்த்தி செய்கிறவன் விவகாரம் செய்தாலும் சொர்ப்பனத்தை-மித்தையாக எண்ணுபவதுபோல் ஜாக்கிர ஜகத்தை யும் மித்தையாகவே மதிக்கிறான்.

## வித்வரன்.

தனபுத்ர வாசனையும் தேக சாஸ்திர வாசனையும் நீங்கும் பொருட்டு சின்மாத்திர மைத்திரி முதலான விரோதி வாசனை திடதர அப்யாச முண்டாகி ஜீவன் முத்தியின் பொருட்டு வாசனை நசித்திருக்கிறதோ வித்வரனவன்.

இவனுக்கு ஜாக்கிர பிரபஞ்சம் சுழுத்தி போன்றிருக்கும் இந்திரிய மிருப்பதுபோலத் தோன்றினாலும் விஷயங்கள் கிரகிக்கப்படாமையால் சுழுத்தனாவான்.

## வித்வரியான்.

பிரம்ம ஞானத்தின் பின் வாசனாக்ஷயம் மனோ நாசாதிகளால் பூரணனாயிருக்கின்றானோ அவனே வரியான் காடசுழுத்தி யுடையவன் இவன் எப்பொழுதும் நிற்விகற்ப சமாதியிலிருப்பவன் ஒருக்கால் பிறர் ரால் விழிக்கச்செய்யக்கூடும்.

## வித்வரிட்டன்.

ஏழாம்பூமியிலுள்ள ஞானி எந்தபிரம்ம வேத்தாவினுடைய மனம் அத்தியந்தம் நாசமாயிருக்கின்றதோ அவன் அகண்ட பிரம்மத்தோடு, தன்மயனாயிருத்தலால் ஒருபோதும் பிறராலும் விழிப்படைகிறதில்லை துரியபூமியிலிருப்பதால் சொரூபத்தினின்றும் பிறராலும் சலிக்கிற தில்லை இவனே பிரம்ம வித்வரிட்டன். ஆசிரமம் (4

இதுகள் சன்யாசிகள் விலக்கு உண்டானல் பிரஸ்டனுவன்

## சுழுத்திக்கும் நிருவிகர்பத்துக்கும் பேதம்.

சுழுத்தியில் அந்தக்கரணத்தின் விருத்தி பிரமாகாரமாகிறதில்லை இருளில் லயமாகிறது

நிருவிகற்ப சமாதியோ சுழுத்தியிலும் மனம் பிரமாகாரமாய் வியாபிக்கிறது.

சமாதியில் அந்தக்கரணமிருக்கிறது இல்லாவிட்டால் சரீரம் கீழே விழுந்துவிடும்.

## நிறுவிகற்ப சமாதியில் இரண்டுவிதம்.

அத்வைதபாவனு ரூபசமாதி யென்றும் அத்வைத அவஸ்தானரூப நிருவிகற்ப சமாதியென்றும் இரண்டு விதம் பாவனுரூப நிருவிகர்ப்ப சமாதியின் அப்யாச மிகுதியால் பிரமாகார விருத்தியும் சாந்தமாய் அவஸ்தான ரூப சமாதியாகிறது. இதைத்தான் எழாவது பூமி என்றும் வரிட்டன் என்றும் சொல்லப்படும்.

## யெக்யம் 5.

தேவயெஞ்யம்— தேவதைகளை யுத்தேசித்து வேதத்தில் கூறிய அக்கினியோத்திரம்—அன்னத்தை யாககுண்டத்தில் போடுதல்

ரிஷியெஞ்யம்— வேதாதிகளை குரு சொன்னபின்தான் அதை சொல்லுதல் சொல்லியபடி அத்தியயனுதிகருமஞ் செய்தல்.

பிதுர்யெஞ்யம்—பிதுர்களை உத்தேசித்து தருப்பனுதி செய்தல்

மனுஸ்யயெஞ்யம்— அதிதிகளுக்கு பகவத்பிரீதி அன்னதானம் செய்தல்.

பூதயெஞ்யம்—பசு பக்ஷி முதலியவைகளுக்கு தீனி போடுதல்.

ஞானபோதினி முற்றிற்று.

## உபதேச மொழிகள்

தூலபஞ்சாக்ஷரம் — ஓம் நமசிவாய
சூக்ஷம பஞ்சாக்ஷரம் — ஓம் சிவாய நம
காரண பஞ்சாக்ஷரம் — சிவய சிவ
மகா காரணம் — ஓம் சிவ்
மகாமனு பஞ்சாக்ஷரம் — சி
அஷ்டாக்ஷரம் — ஓம் நமோ நாராயணாய நம:
விஞ்சை — ஓம் ஐயுங் கிலீயும் சவ்வும் மசி நசி

## பிரஹ்ம பாவனை

சோ—அம் அல்லது—சிவோகம் அல்லது—ஓம் மூன்றும் ஒன்றே.

ஏடணை 3

அர்த்த யேடணை, புத்திர யேடணை, உலக யேடணை

(காயாபுரி தெரிசனம்)

பூமியிலே மேடுபள்ளமில்லாதயிடத்தில் ஆகாயத்தில் மேகமறைவில்லாதவிடத்தில் வெய்யலில் தன்னுடைய நீளம் ஐந்தடி முதல் பத்தடி வரை உள்ள தன் நிழல் முகமாக நின்று கை இரண்டையும் தொங்கவிட்டு கண்ணிமையாமல் முன் தன் நிழலை உற்று பார்த்துவிட்டு ஆகாயத்தைப் பார்த்தால் அவன் உருவம் தோன்றும் பொன்னிறமாக தோன்றினால் அவனுக்கு செல்வமுண்டாகும் வெண்ணிறம் பிராணபயமில்லை ஆயுள் வளரும் செம்மைநிறம் ஆயுள் தேயும் கருமையானால் நலிவுண்டாகும் கைகால் தோன்றாதிருந்தால் ஆறுமாதத்தில் மரணம் தலையில்லாதிருந்தால் மூன்றுமாதத்தில் மரணம் தினமும் விடாமல் பனிரண்டு வருஷம் சாதித்தால் அந்த நிழல் நம் முன்னின்று பேசும் அதன் முகாந்திரமாய் அஷ்டமாசித்தி பெறலாம் பின்னும் சிலநாளில அது ஒரு ஆள் உருவமாகி தன்னுடனேயே திரியும் படுத்தால் தானும் படுக்கும் எழுந்தால் எழும் இவனுக்கு வரும் நன்மை தீமைகளை முன்னதாக வுணர்த்தும் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ கன்னிகாபரமேஸ்வரி அச்சுக்கூடம், சேலம்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 1 | 2 | மர | மற |
| 4 | 9 | 2 | செய்தும் | செய்துந் |
| 5 | 11 | 2 | றணையவ | ரணையவ |
| 6 | 14 | 5 | தினது | திரனது |
| 9 | 20 | 1 | தாசைட் | தாசைப் |
| 10 | 21 | 3 | லென்று | லென்றுன் |
| 10 | 22 | 2 | யார் | யாற் |
| 10 | 22 | 4 | பொப்யாம் | பொய்யாம் |
| 11 | 23 | 5 | உறவினருள் | உறவினருல் |
| 12 | 26 | 1 | நீதி | நிதி |
| 13 | 28 | 10 | கொடுத்து | கெடுத்து |
| 13 | 29 | 1 | யிவனை | பாவனை |
| 14 | 30 | 1 | விழும் | வீழும் |
| 16 | 38 | 3 | கருத்தும் | கருத்துறு |
| 16 | 38 | 2 | தார்கு | தார்குப் |
| 18 | 1 | 1 | மீட்ட | மீண்ட |
| 18 | 2 | 2 | லெய்தி | வெய்தி |
| 21 | 5 | 3 | யாதாலால் | யாதலால் |
| 23 | 3 | 10 | வாக்கியர்த்த | வாக்கியார்த்த |
| 24 | 5 | 1 | வலக்கி | லறுக்கி |
| 26 | 9 | 2 | அஞ்ஞானி | அஞ்ஞான |
| 26 | 10 | 9 | லெரற்பன | சொற்பன |
| 28 | 14 | 12 | காண்பதா | காண்பது |
| 28 | 15 | 8 | சுமுத்தி | சுழுத்தி |
| 30 | 19 | 2 | மறை | முறை |
| 31 | 20 | 3 | முத்தளை | முத்தனை |
| 37 | 13 | 1 | ரசிதன | ருதனத் |
| 39 | 14 | 2 | படியுமாயா | படியுறுமாயா |
| 39 | 14 | 4 | நினைக்குரூப | நினக்குரூப |
| 39 | 15 | 3 | அழைய | அணைய |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 44 | 24 | 1 | முளக்க | முழக்க |
| 44 | 24 | 2 | இருப்பவத் | ஓப்பவத் |
| 44 | 24 | 3 | தாள்ந்த | தாழ்ந்த |
| 44 | 24 | 4 | மகிள் | மகிழ |
| 44 | 21 | 8 | கரிந்து | கரித்து |
| 45 | 2 | 2 | விவாத | வியாத |
| 47 | 4 | 4 | யொப்பிரென்ணு | யொப்பீரென்ன |
| 55 | 19 | 1 | மெனனின் | மென்னின் |
| 64 | 12 | 1 | அனைத்து | வனைத்து |
| 64 | 12 | 1 | லற்புத | வற்புத |
| 69 | 3 | 1 | ஒவாண்ணு | வொன்ணு |
| 86 | 2 | 7 | நிஸ்டமான | நிஸ்டையான |
| 87 | 4 | 11 | மணீ | மணி |
| 99 | | 2 | விசாதம் | விசாரம் |
| 90 | | 4 | தாராதன்மியம் | தாரதன்மியம் |
| 91 | 5 | 1 | கைலைவலை | கைலைவரை |
| 98 | 4 | 10 | வாயுல் | வாயுள் |
| 98 | 4 | 10 | யோகஸ்தனம் | யோகஸ்த்தானம் |
| 101 | 3 | 1 | தத்துஞான | தத்துவஞான |
| 102 | 5 | 4 | விளங்க | விளக்க |
| 105 | 10 | 4 | காண்டறுதன் | காண்டத்தன் |
| 107 | 13 | 7 | அரன் | அரசன் |
| 109 | 19 | 4 | னுடனந | னுடநன் |
| 110 | 20 | 4 | மெய்து | மெய்யிது |
| 111 | 23 | 3 | மெலாந் | மெலாம் |
| 114 | 29 | 2 | மேதரு | மேதகு |
| 115 | 30 | 6 | சொல்வார | செர்ல்வார் |
| 116 | 33 | 7 | வானென்று | வாயென்று |
| 120 | 38 | 9 | பட்டணசென்று | பட்டணஞ்சென்று |
| 120 | 39 | 7 | பேதமே | அபேதமே |
| 120 | 39 | 7 | னுக்கெவ்விடமும் | யெனக்கெவ்விடமும் |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 124 | 2 | 4 | ஞுர் | ணுர் |
| 126 | 8 | 2 | னன | னன் |
| 128 | 13 | 3 | திருப்பொளீ | திருப்பொலி |
| 129 | 1 | 7 | சாத்துவீத | சாத்வீக |
| 129 | 1 | o | இன்பவில்லை | இன்பமில்லை |
| 131 | 5 | 9 | இசண்டின் | இரண்டின் |
| 142 | 7 | 1 | மலர்கள | மலர்களா |
| 142 | 4 | 3 | உறுந் | கூறுந் |
| 142 | 8 | 6 | இபிவற்ற | இழிவற்ற |
| 152 | 4 | 9 | கின்றன | கின்ற |
| 152 | 4 | 10 | பிரஸ்பதி | பிரகஸ்பதி |
| 155 | 2 | 3 | நல்வி | நவ்வி |
| 156 | 3 | 4 | தென்றே | தன்று |
| 156 | 4 | 1 | கங்கார | சங்கார |
| 157 | 6 | 2 | மூன்வவத்தை | மூன்றவத்தை |
| 158 | 2 | 5 | சலலத்தை | சகலத்தை |
| 158 | 2 | 9 | ஆண்மா | ஆன்மா |
| 159 | 5 | 2 | யுயர்த | யுயர்ந்த |
| 163 | 12 | 7 | றனிமைமயா | றனிமையா |

## ஞானபோதினி

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 3 | ருக்ம்ம் | ருக்கும் |
| 6 | 8 | மேலாவனே | மேலானவனே |
| 8 | 24 | வென்றுள் | வென்றுல் |
| 13 | 3 | புத்திரர்கள் | புத்திரர்களை |
| 16 | 20 | பட்டது | படாது |
| 28 | 11 | வனைப் | வனைய் |
| 31 | 16 | பஞ்ச | பிரபஞ்ச |
| 32 | 26 | மனுவர் | மனுவானவர் |
| 40 | 1 | சித்கு | சித்தி |
| 62 | 23 | எழுதியதினல் | எழுதினன் |